# முஸ்லிம் முரசு

★ காங்கிரஸ் தோல்வியுறுமா?



ஆகஸ்ட் 1966
விலை 40 காசு

★ 'வக்பு போர்டு' சாதனை என்ன?

★ மாணவிகளுக்கு மஸ்ஜித்!

# அன்புள்ள ஆசிரியருக்கு

அஸ்ஸலாமு அலேக்கும்.

## கருத்துள்ள கதை!

மீலாத் மலரில் வெளிவந்த 'கனவு நனவாகுமோ?' என்ற கருத்துச் செறிவுள்ள கதை என்னை மிகவும் கவர்ந்தது. கதை நிகழும் சூழ்நிலேயும் சுற்றுப் புறமும் உண்மையாகவே இருப்பதால் கதையின் ஓட்டம் என்னையும் அதனூடே ஒன்றிக்கச் செய்துவிட்டது. நல்லகருத்தை இனிமை சொட்டும் எழுத்தில் வடித்து விட்டார் அதன் ஆசிரியர்.

எஸ். டி. ஏ. முகம்மது மீரான், சென்னை-12.

## தியாகக் குழந்தை!

'வளம் தந்த வளர்ப்பு' என்ற தலைப்பில் மீலாத் மலரில் வெளிவந்த இறுதித் தூதரின் இளமைப் பருவம் மெய்சிலிர்க்க வைத்தது. ஓரிடத்தில் 'தமது செவிலித் தாயின் உடல் நலம் பாதிக்கப்படாமலிருக்க வேண்டுமென்பதற்காக குழந்தை முஹம்மத் ஒரே மார்பில் மாத்திரம் பாலருந்திற்று' என்று குறிப்பிடப்படுகிறது. ஆனுல், தம் பால்குடி சோதரர் அப்துல்லாவின் நலன் பொருட்டே ஒரே மார்பில் முஹம்மத் பாலருந்தினர் என்பதே உண்மை.

பேகம் கான், தலைமையாசிரியர், எம். ஜி. எச். ஸ்கூல், சேலம்-1.

## முரசின் சிறப்பு!

மீலாத் மலரின் சிறப்பு வர்ணனைக்கு அப்பாற்பட்டது. எவ்வளவோ மாத, வார இதழ்களைப் படித்து வந்தாலும் ஆத்மிக சிந்தனையைச் சுவைபட ஏற்படுத்த வல்லது முஸ்லிம் முரசு ஒன்றுதான். இது மென்மேலும் சிறக்க வல்லவன் அருள் வானுக!

சி. காமிலா பானு, கம்பம்.

## பயனுள்ள பயணம்!

ஹஜ்ஜுப் பயணத்தைப் பற்றிய பேட்டிக் கட்டுரை ஒரு புதுமையான முயற்சி; பயனுள்ள முயற்சி. ஹஜ்ஜு யாத்திரையின் அனுபவங்களைத் தெளிவாகப் புரிந்து கொள்ளத் துடிக்கும் ஏழை முஸ்லிம்களுக்கு இது பெரிதும் ஆறுதலைத் தரும்.

ஈ. எம். அப்துல் முனுப்-ஹமீதா பேகம், தோப்புத்துறை.

# பொருளடக்கம்

மலர் 19] ஆகஸ்ட் 1966 [இதழ் 2

ஹிஜ்ரீ 1386 ரபீயுல் ஆகிர்



மற்றும் பல சுவையான கட்டுரைகள், கேள்வி—பதில்கள்

முஸ்லிம் முரசில் வெளியாகின்ற
கதைகளில் வரும் சம்பவம், பெயர்கள் யாவும் கற்பனையே!



# காங்கிரஸ் தோல்வியுறுமா?

இந்தியாவின் பொருளாதாரம் கடந்த 19 ஆண்டுகளில் சீர்குலைந்து வந்திருக்கிறது. ரூபாய் நாணயத்தின் அந்நிய நாட்டு மதிப்பு குறைந்திருப்பதே இதற்குச் சான்று.

ஏழைகள் மேலும் ஏழைகளாகவும், பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களாகவும் ஆகியிருக்கின்றனர்.

நாட்டில் தொழில் உற்பத்தி உயர்ந்திருக்கிறது. ஆனால் தொழிலாளர் வாழ்வு உயரவில்லை. முதலாளிகள் முன்னேறியுள்ள அளவிற்குத் தொழிலாளர்கள் முன்னேறவில்லை. மூன்று ஐந்தாண்டு திட்டங்கள் முடிந்த பின்பும் நாட்டின் செல்வவளம் பெருகவில்லை.

இந்நிலையில் 1967ல் நாட்டிலே பொதுத் தேர்தல் நடைபெறவிருக்கிறது.

மீண்டும் காங்கிரஸ் கட்சியே தேர்தலில் வெற்றி பெறுமானல், நாட்டின் பொருளாதாரம் என்னவாகுமோ என்ற கவலை எதிர்க்கட்சிகளில் பலருக்கு உண்டு. ஆளுங்கட்சியின் போக்கும் கொள்கையும் சரியில்லை என்று அவர்கள் நினைக்கின்றனர்.

நாடு முழுதும் உள்ள பல எதிர்க் கட்சிகளில் எதை ஆதரிப்பது என்ற குழப்பமும் கேள்வியும் பொதுமக்களிடம் காணப்படுகின்றன. இதனுலேயே காங்கிரஸ் இந்த முறையும் வெற்றி பெறும் என்று காமராஜர் போன்றவர்கள் நம்புகின்றனர்.

காங்கிரஸ் தன்னுடைய பலத்தைக் கொண்டே வெற்றி பெறும் என்ற நம்பிக்கை காமராஜருக்கு இல்லை. எதிராளியின் பலவீனத்தினுல் காங்கிரஸ் வெல்லும் என்று அவர் நம்புகிருர்.

எனவே எதிர்க்கட்சிகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து ஒரு குறைந்தபட்ச வேலைத்திட்டத்தை உருவாக்கி மக்கள் முன் வைத்தால் பொது மக்களுக்கு நம்பிக்கையுண்டாகும்.

தமிழ் மாநிலத்தில் தி. மு. க. ஒரு வலிமையுள்ள எதிர்க் கட்சியாக உருவாகி வருகிறது. தி. மு க. வுக்குத் துணையாக மற்றக் கட்சிகள் கூட்டணி அமைத்துக் கொண்டிருப்பதால் தமிழ் நாட்டில் காங்கிரஸ் தோற்கடிக்கப்படக்கூடிய வாய்ப்பு இருக்கிறது.

ஆனால், மற்ற மாநிலங்களிலும், மத்தியிலும் காங்கிரசைத் தோற்கடிக்கும் வாய்ப்பு இருக்கிறதா?

தமிழ் நாடு தவிர மற்ற மாநிலங்கள் அனைத்திலும் காங்கிரஸ் கட்சிக்குள் பிளவும் பூசலும் இருக்கின்றன. இருந்தாலும், காங்கிரஸ் வெற்றி பெறும் என்று காமராஜர் நம்புகிறார். அங்கெல்லாம் தி. மு. க. போன்ற வலிமையுள்ள எதிர்கட்சிகள் இல்லை; எதிர்க்கட்சிகள் கூட்டணி சேரும் வாய்ப்பும் இல்லை. எனவே எதிர்க்கட்சிகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து ஒரு பொதுவான வேலைத்திட்டத்தை உருவாக்கி, மக்கள் முன் வைத்தால் அவர்களுக்கு நம்பிக்கையுண்டாகும். டில்லியில் காங்கிரசைப் பதவியிலிருந்து அகற்ற முடியும்.

## விளம்பரம் - ஒரு வார்த்தை!

ரூபாய் நாணய மதிப்புக் குறைவு காரணமாக அந்நியநாட்டுப் பொருள்களின் விலைகள் ஏறிவிட்டன. இதனால் நம் நாட்டுப் பத்திரிகைத் தொழில் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறது. பத்திரிகைக் காகிதம் டன் ஒன்றுக்கு ரூ 800 வரையில் உயர்ந்து விட்டது. முந்திய விலையில் மூன்றில் ஒரு பங்கு உயர்ந்திருக்கிறது.

பெரிய அளவில் விற்பனையாகும் வாரப்பத்திரிகைகளும், தினப் பத்திரிகைகளும் இந்தக் காகித விலையேற்றத்தால் ஏற்படும் செலவை ஒருவாறு சரிக்கட்ட முடியும். அவை விளம்பர வருமானத்தைப் பெருக்கி, பத்திரிகையின் உற்பத்திச் செலவை சமாளிக்கின்றன. ஆனால் சிறிய நடுத்தரப் பத்திரிகைகளால் சரிக்கட்ட முடியாது. சந்தாவை உயர்த்தினால் பத்திரிகைகளின் விற்பனை குறையும்.

தமிழ் நாட்டில் நடந்துவரும் நம் சமுதாயப் பத்திரிகைகளைப் பொறுத்த வரையில் அவை ஏற்கனவே வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்ட முடியாத இலாபத்தில் நடக்கின்றன. அநேக முஸ்லிம் பத்திரிகைகள் தமிழ் நாட்டில் துவங்கிய வேகத்தில் மூடு விழா செய்து விட்டதற்கும், வரவுக்கு மிஞ்சியே செலவே காரணம்.

பத்திரிகைகளுக்கு விளம்பர வருமானமே முதுகெலும்பு போன்றதாகும். முஸ்லிம் பத்திரிகைகளுக்கு விளம்பர வருமானம் மிகக் குறைவு. சமுதாயப் பத்திரிகைகள் பொதுவான விளம்பரங்களை அதிகமாய்ப் பெற முடியவில்லை. குறைந்த அளவில் விளம்பரங்கள் கிடைத்தாலும், விளம்பர வருமானம் போதுமானதாக இல்லை.

சமுதாயப்பற்றுள்ள வியாபாரிகள் தங்கள் இதயத்தைச் சற்று விசாலமாக்கிக் கொண்டால், சிறிய பத்திரிகைகள் இந்த நெருக்கடியைச் சமாளிக்க முடியும்.




# 'வக்பு போர்டு' என்ன செய்கிறது?

இந்த வருடம் கல்லூரியில் புதிதாக மாணவர்களைச் சேர்ப்பது பெரும் பாடாகிவிட்டது. ஏராளமான மாணவர்களுக்குக் கல்லூரிகளில் இடம் கிடைக்கவில்லை.

முஸ்லிம் மாணவர் பலர் இந்த வருடம் கல்லூரிகளில் இடம் கிடைக்காமல் தவித்துப் போனார்கள். இதனால் மனமுடைந்து போன மாணவர்கள் மிகப் பலர்.

முஸ்லிம்கள் படிப்பதில்லை என்று கூறப்பட்ட நிலை அண்மைக்காலம் வரை இருந்தது. அதற்கு மாறாக, இன்று அவர்கள் படிப்பதற்குக் கல்லூரியில் இடம் கிடைக்கவில்லை என்ற பரிதாப நிலை ஏற்பட்டுள்ளது.

முஸ்லிம்களுக்காக சென்னையில் ஒரு கல்லூரியும், திருச்சியில் ஒன்றும், அதிராம் பட்டினத்தில் ஒன்றும் ஆக மூன்று பெரிய கல்லூரிகள் இருந்தும் முஸ்லிம் மாணவர்களுக்கு பி. யு. சி. யில் இடம் கிடைக்கவில்லை. அவற்றில் இடம் கிடைத்தாலும், சில மாணவர்கள் விரும்பும் பாடங்கள் கிடைக்கவில்லை என்பது மிகப் பரிதாபம்.

எதிர்காலத்தில் இந்த நிலை இன்னும் மோசமாகவே இருக்கும். இந் நிலையை மாற்றிட இன்னும் பல கல்லூரிகள் தமிழ் நாட்டில் முஸ்லிம்களால் தோற்றுவிக்கப்படவேண்டும். இதர சமூகத்தினரைப்போல் முஸ்லிம்களும் கல்விக்காக வாரி வழங்கிட வேண்டும் பெரும் பணத்தைச் செலவு செய்யாமல் சேமித்து வைத்தவர்களெல்லாரும் இறுதியில் என்ன கதி அடைந்தனர் என்பதை நாம் அறிவோம்!

இது சம்பந்தமாக முஸ்லிம்களின் அறநிலையப் பாதுகாப்பு அமைப்பான ''வக்பு போர்டு'' என்ற கழகத்திற்கு முஸ்லிம்களின் சார்பில் நமது பணிவன்பான யோசனை யொன்று கூறுகின்றோம்.

வக்பு போர்டில் நமது மதிப்புக்குரிய அறிஞர்கள் பலர் இருக்கின்றனர். அவர்கள் இந்நாள் வரை இத்துறையில் ஏன் கவனம் செலுத்தவில்லை என்பது வியப்பாக இருக்கிறது. சென்னை மந்திரி சபையில் இணைக்கப்பட்டுள்ள அற நிலையப் பாதுகாப்பு அமைச்சகத்தின் மூலம், தமிழ் நாட்டில் பல நல்ல காரியங்கள் நடத்தி வைக்கப்படுகின்றன. பெரிய கோயில்களின் வருமானம் சிறிய கோயில்களுக்குச் செலவிடப்பட்டு, அற நிலையங்கள் நல்ல முறையில் பரிபாலனம் செய்யப்படுகின்றன. கோயில் சொத்து வருமானங்களிலிருந்து பெண்களுக்காக கல்லூரிகள் அமைக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. அற நிலையத்தின் பெயரால் நல்ல பல நற்காரியங்கள் நடை பெற்று வருகின்றன.

இதுபோன்ற நற்காரியங்கள் எதுவும் முஸ்லிம் அற நிலையமான வக்பு போர்டின் பெயரால்

நடைபெறுவதாகத் தெரிய வில்லை.

ஹிந்துக்களின் அற நிலையம் போல், வக்பு போர்டு அத்துணை வருமானம் நிறைந்ததாக இல்லை யாயினும், குறைந்த அளவில் உதவி செய்யலாம். பற்றுமற் போனல் பணவசூல் செய்தும் பயன்தரும் பள்ளிக் கூடங்களை அமைக்கலாம். அரசாங்கத்தின் முயற்சி இருந்தால் பலவழிகள் பிறக்கும்.

வக்பு போர்டில் பழமை விரும் பிகளே இருக்கிருர்கள் என்ற பழியை நாம் ஏற்க முடியாது. சீர்திருத்தக் கருத்துள்ள சமூதா யச் சிற்பிகள் பலர் இருக்கின்ற னர். அவர்கள் ஏன் வாளாயிருக் கிருர்கள் என்பது நமக்கு விளங்கவில்லை. மற்றவர்கள் ஒத்துழைக்க விரும்பவில்லை என் ருல் அத்தகையவர்கள் கண்ணிய மாக வெளியேறி நல்லவர்களுக்கு வழிவிடுவார்களாக!

## அட்டைப் படம்

இந்தியா சுதந்திரம் அடையு முன், எல்லைக் காந்தி என்று பெயர் பெற்ற கான் அப்துல் கப்பார் கான் அவர்கள் இப் போது ஆப்கனிஸ்தானில் காபூல் நகரில் இருக்கின்றுர். அண்மையில் அரசாங்க விருந் தினராக ஆப்கனிஸ்தான் சென்றிருந்த நமது துணை ஜனுதிபதி டாக்டர் ஜாகிர் ஹுஸைன் அவர்கள் அப்துல் கப்பார் கானை காபூலில் சந் தித்தபோது இருவரும் கட்டித் தழுவி மகிழ்ந்தனர். கான் அப்துல் கப்பார் கான் அப் போது உணர்ச்சி மிகுதியால் கண்ணீர் சிந்திவிட்டார் என்று சொல்லப்படுகிறது.

பழைய நண்பருடன் பேச வாயெடுத்தார் எல்லைக் காந்தி. தொடர்ந்து பேசமுடியாமல் தொண்டையடைத்து, உணர்ச்சி மேலிட்டுக் கண்ணீர் கலங்கி அழுதுவிட்டார்!

# கண்டதும் கேட்டதும்



"திப்பு"

முன்னாள் ஜஸ்டிஸ், பஷீர் அஹ்மத் சயீத் அவர்களால் தோற்றுவிக்கப்பெற்ற தென்னிந்தியக் கல்வி டிரஸ்ட் (எஸ். ஐ. இ. டி.) கல்லூரியில் படிக்கின்ற முஸ்லிம் மாணவிகளுக்காக மேற்படி கல்லூரியின் காம்பவுண்டுக்குள் புதிய பள்ளிவாசல் ஒன்று, ஒன்றரை லட்சம் ரூபாய் செலவில் நிர்மாணிக்கப் பெற்றுள்ளது.

இந்த மஸ்ஜிதின் திறப்பு விழா 29—7—66 மாலையில் டெல்லி மத்திய மந்திரி பக்ருத்தீன் அலீ அஹ்மது அவர்களின் தலைமையில், டில்லி ஜமீயத்துல் உலமாயே ஹிந்தின் தலைவர் மவ்லானா மவ்லவி முப்தீ அதீகுர் ரஹ்மான் உஸ்மானீ அவர்களால் நடத்தி வைக்கப் பெற்றது.

கல்லூரியின் துவக்க காலத்திலேயே செய்திருக்க வேண்டிய நல்ல காரியத்தை இப்பொழுதேனும் நிறைவேற்றியுள்ள நிர்வாகத்தினரை நாம் பாராட்ட வேண்டும். ஒரு முஸ்லிம் பெண் கல்லூரிக்கு நீச்சல் குளத்தை விட முக்கியமானதல்லவா தொழுகைக்குரிய பள்ளிவாசல்?

பொதுவாக கல்வியும் விஞ்ஞானமும் பெருகிவரும் இக்காலத்தில், முஸ்லிம் சமூகத்தினரும் கல்வியில் முன்னேறி வருவதைப் பற்றி அமைச்சர் பக்ருத்தீன் மகிழ்ச்சி தெரிவித்தார். வாய்ப்பும் வசதியும் அளிக்கப்பட்டால் முஸ்லிம் இளைஞர்களைவிட முஸ்லிம் பெண்கள் நன்றாகப் படித்து முன்னேறுவர் என்பதில் ஐயமில்லை.

ஒன்றரை இலட்சம் ரூபாய் செலவில் அருமையாக அமைக்கப்பட்டுள்ள மஸ்ஜித் கல்லூரியின் நடுவில், கம்பீரமான ஒரே மினாராவுடன், 25 தண்ணீர்க் குழாய்களுடன் கட்டப் பெற்றுள்ளது. ஏக காலத்தில் 200 பேர் இதில் தொழலாம்.



உயர்ந்த மினாராவுக்கு அருகே தாழ்ந்த தோற்றத்தில நாற்புறமும் இரும்புக் கிராதிகளுடன் இருப்பது மஸ்ஜித்.

வாய்ப்பு இல்லாமலே அநேக முஸ்லிம் பெண்கள் அரை குறைபடிப்போடு கல்வியை முடித்துக்கொள்கின்றனர். பொருளாதார வசதிகள் இருந்தால் ஏழை முஸ்லிம் பெண்கள் ஏராளமாக உயர் கல்வி பெறத் தயாராயிருக்கின்றனர். மற்ற சமூகங்களில் இருந்து வந்த 'கைக்கூலி' கல்யாண முறை முஸ்லிம் சமூகத்திலும் புகுந்துவிட்டதால் ஏழை முஸ்லிம் பெண்கள் கல்வி கற்றுப் பள்ளி ஆசிரியைகளாகவும், டாக்டராகவும் பணியாற்ற விரும்புகின்றனர். இது போன்ற பணிகளில் பெண்கள் பங்கு பெறுவதை நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், சம்பந்தப்பட்ட பெண்கள் விரும்பக் கூடிய கட்டாய சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. நாளுக்கு நாள் முஸ்லிம் பெண்கள் கல்வித் துறையில் முன்னேறி வருகின்றனர். முஸ்லிம் சமூகத்தில் சரி பாதியினர் கண் பெற்ற குருடர்கள் என்ற பரிதாப நிலை மாறி, இன்று பார்வையுள்ள கண்ணினராய் மாறி வருகின்றனர்!

சில பெண்கள் உயர்தர கல்வி பயின்றவுடன், இஸ்லாமிய பண்பாடுகளைத் துறந்து தங்கள் பழக்க வழக்கங்களில் தலைகீழாக மாறிவிடுகின்றனர். இந்த அபாயம் விளையுமோ என்ற அச்சத்தினால் சிலர் தங்கள் பெண்களைக் கல்லூரிகளுக்கு அனுப்பத் தயங்குகின்றனர்.

ஆங்கிலம் கற்றதால் சில பெண்கள் நவநாகரிக மோகத்தில் மூழ்கிப் போகிறார்கள் என்ற அபவாதத்திற்கு இலக்காகாதிருக்க, எஸ். ஐ. இ. டி. போன்ற கல்லூரிகள் ஆதாரமாயிருக்க வேண்டும். அதற்கு இலக்கணமே இந்தப் புதிய மஸ்ஜித். இன்னும் பல்லாயிரம் இஸ்லாமியப் பெண்கள் உயர்தரக் கல்வி பெற இக்கல்லூரியும் மஸ்ஜிதும் ஒரு தூண்டுகோலாக அமையட்டும்! படித்த இஸ்லாமியப் பெண்கள் தொழுவதைப் பின்பற்றியேனும், வெட்கமும் கூச்சமும் அடைந்து இஸ்லாமிய இளைஞர்கள் தொழுகையின் பக்கம் திரும்பட்டும். இறைவணத் தொழுவதே கல்வி கற்றதற்கு அடையாளம், இந்த முயற்சியை மேற்கொண்ட பஷீர் அஹ்மத் சயீத் அவர்களையும், கல்லூரியின் தலைவி ஹாஜானி பாத்திமா அக்தார் சாஹிபாவையும், நிர்வாகத்தினரையும் பாராட்டுகிறோம்.

# அடுத்த இதழில்

- ஹாஜானி சங்கு பாத்திமா கனி அவர்களுடன் நிகழ்ந்த ஹஜ்ஜுப் பயணப் பேட்டிக் கட்டுரை.
- எஸ். ஐ. இ. டி. பெண்கள் கல்லூரியின் தலைவி ஹாஜானி பாத்திமா அக்தார் அவர்கள் தமது பெண் கல்லூரியைப் பற்றி நமது ஆசிரியருக்கு அளித்த பேட்டி விவரம் அடங்கிய கட்டுரைகள்.

★ அலீகர் முஸ்லிம் பல்கலைக் கழகத்தில்கூட முஸ்லிம் பெண்களுக்காக ஒரு மஸ்ஜித் கிடையாது, இங்கே உண்டு!

★ கல்லூரியின் அமைப்பிலும் பாடத்திட்டங்களிலும் உலகத்திலேயே ஒரு புதுமை இக் கல்லூரி என்று கூறுகிறார் பாத்திமா அக்தார்! படித்துப் பாருங்கள்!

# திருக்குர்ஆன் தெளிவுரை

## 94. இறைவனுக்கு அடுத்தபடி!

(நபியே!) உமதிறைவன் தன்னைத் தவிர மற்றெவரையும் வணங்கக் கூடாதென்று கட்டளையிட்டிருப்பதுடன் தாய் தந்தைக்கு நன்றி செய்யும்படியாகவும் கட்டளையிட்டிருக்கிறான். உம்மிடமிருக்கும் அவர்களில் ஒருவரோ அல்லது இருவருமோ முதுமையை அடைந்து விட்டபோதிலும் அவர்களை வெருட்டவும் வேண்டாம். அவர்களிடம் எதைக் கூறியபோதிலும் மிக்க மரியாதையாகவும் அன்பாகவுமே பேசவும். 17 ; 23.

அவர்களுக்கு மிக்க அன்புடன் பணிந்து நடப்பீராக! அன்றி, "என் இறைவனே! நான் குழந்தையாக இருந்தபொழுது மிக்க அன்பாக என்னை அவர்கள் வளர்த்துப் போஷித்த வண்ணமே நீயும் அவ்விருவர் மீதும் அன்பும் அருளும் புரிவாயாக!" என்றும் நீர் பிரார்த்திப்பீராக! 17 : 24.

பெற்றோர்களுக்கு மிக்க மரியாதை செலுத்த வேண்டுமென்று இறைவன் கூறுகின்றான். அல்லாஹ்வுக்கு வணக்கம் செலுத்துவதற்கு அடுத்தபடி தாய் தந்தையருக்கு மரியாதை செலுத்த வேண்டுமென்று குர்ஆனில் அறிவிக்கப்படுகின்றது.

மனிதர்களுக்குள்ளே யாருக்கு அதிக மரியாதை செலுத்த வேண்டுமென்றால், பெற்றோர்களுக்கே அந்த மரியாதை உரியதாகும். பெற்றோர்களுக்குப் பணிந்து நடக்கின்ற பிள்ளைகள் வருங்காலத்தில் தங்கள் தலைவர்களுக்கும் பணிந்து நடப்பார்கள். இது அவர்களின் எதிர்கால மேன்மைக்கு ஏற்றதாயிருக்கும்.

பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைத் தங்களுடைய உயிரினும் உயர்ந்ததாக மதித்து இளமைப் பருவத்தில் வளர்க்கின்றனர்.

பெற்றோர்கள் வயது முதிர்ச்சியால் வருந்தும் போது அவர்களுக்குத் துன்ப நிலையைத் தராதிருக்குமாறு நாம் இறைவனிடம் மன்றாட வேண்டும். "நான் சிறுவனாயிருந்த போது அவர்கள் எப்படி என்னை அன்புடன் வளர்த்தார்களோ, அதைப் போன்றே இறைவா, அவர்களின் மீது உன் கருணையைப் பொழிந்திடுவாயாக!" என்று அல்லாஹ்விடம் நாம் அடிக்கடி மன்றாட வேண்டும்.

# பாராட்டு விழா

மலேசியத் தலைநகரில் நடைபெற்ற உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டில் கலந்துகொண்ட தமிழகத்தின் ஒரே முஸ்லிம் பிரதிநிதி கே.பி.எஸ். ஹமீது பி.எஸ்ஸி; பி.எல்; எம்.லிட். அவர்களைப் பாராட்டும் வகையில் பினங்கில் பல சிறப்புக் கூட்டங்கள் நடத்தப்பட்டன. (இவரின் கவிதைப் பெயர் 'செந்தாமரை')

தேனீர் விருந்தில் தமிழவேள் பி. டி. ராஜன், மதுரைத் தமிழ்ச் சங்க செயலாளர் பழநியப்பன், வள்ளுவமணி வள்ளல் ரெனு, நகராட்சி மன்ற உறுப்பினர் எஸ். எம். இத்ரீஸ் ஜே. பி., பட்டர் வொர்த் ஜைனுத்தீன் பி.எஸ்ஸி. ஆகியோர் சிறப்புரையாற்றினார்கள். தாவூத் ரெஸ்டாரண்டு நிர்வாகப் பங்காளி யூசுப் அவர்கள் கே. பி. எஸ். ஹமீது அவர்களுக்கு கடிகாரமொன்றை அன்பளிப்புச் செய்தார்கள். பாராட்டுத் தேனீர் விருந்தளித்த வட மலாயா தமிழ் எழுத்தாளர் சங்கத்திற்கு நன்றி கூறிய பாவலரின் மைந்தர் தமது தந்தையின் அவதானக் கலை பற்றிப் பேசினார். சங்கச் செயலாளர் கவிஞர் கரீம் நன்றி கூற கூட்டம் முடிவடைந்தது.



இக்பால் இயக்கம் நடத்திய சிறப்புக் கூட்டத்தில் ஹமீதுடன் வள்ளுவமணி வள்ளல் ரெனு, ஜே. எம். ஹுசைன் எஸ். எம். இத்ரீஸ், தாவூது ரெஸ்டாரண்ட் யூசுப், பட்டர் வொர்த் ஜைனுத்தீன், மற்றும் உறுப்பினர்கள்.

பினங்கு இக்பால் இயக்கம் நடத்திய மாபெரும் சிறப்புக் கூட்டத்தில் இலக்கியம் பற்றி கவிஞர் ( செந்தாமரை ) ஹமீது பேசினார்.

வடமலாயா தமிழ் எழுத்தாளர் சங்கம் பாராட்டுத் தேனீர் விருந்தொன்றை நடத்தியது. சங்கத் தலைவர் ஜே. எம். ஹுசைன் பி. ஏ. அவர்களின் தலைமையில் நடைபெற்ற இத்

இக் கூட்டத்திற்கும் ஜே. எம். ஹுசைன் தலைமை தாங்கினார். அறிமுகவுரை நிகழ்த்திய பட்டர்வொர்த் ஜைனுத்தீன் இத்தகைய மாநாடுகளில் இன்னும் பல

முஸ்லிம்கள் இடம்பெற வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். கூட்டத் தலைவர் ஜே.எம். ஹுசைன், முஸ்லிம் பிரதிநிதிகளுக்குத் தமிழாராய்ச்சி மாநாட்டில் போதிய இடம் அளிக்காததை வன்மையாகக் கண்டிப்பதாகக் குறிப்பிட்டார். ஒரு மணி நேரத்திற்கு மேல் பேசிய தமிழறிஞர் ஹமீது இஸ்லாம் தமிழுக்காற்றிய தொண்டினைச் சிறப்பித்துக் கூறினர்.

தமது பினுங்குப் பயணம் மிகச் சிறப்பாக அமைந்ததாகக் கூறிய கவிஞர் ஹமீது, நண்பர்களைப் பிரிய மனமின்றித் தலைநகர் திரும்பினர்.



கவிஞர் ஹமீதுக்கு தாவூது ரெஸ்டாரண்ட் யூசுப் அன்பளிப்புச் செய்கிறார். தமிழவேள் பி. டி. ராஜன், மதுரைத் தமிழ்ச் சங்க செயலாளர் பழனியப்பன் ஆகியோர் இருக்கின்றனர்.

## பெயர் சூட்டு விழா

*அஸ்லாமு அலைக்கும்! எங்கள் சகோதரர் எஸ். ஏ. நூர்முகம்மதுவின் ஆண் குழந்தைக்கு 20—7—66, புதன் கிழமை எலந்தங்குடி எமது இல்லத்தில் 'முகம்மது ரஸ்வி' என்று பெயர் சூட்டியபோது எமது அழைப்புக்கு இணங்கி, இந்த விழாவுக்கு வந்திருந்த உங்களுக்கும், பரிசுப் பொருள்களும், வாழ்த்துச் செய்திகளும், வழங்கிய உறவினர்கள், நண்பர்கள் அனைவருக்கும் எங்களது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.*

எஸ். ஏ. அப்துல் ரஹீம் பிரதர்ஸ்,

எலந்தங்குடி, Comp:- சிங்கப்பூர்.

## சந்தா விபரம்

| | உள்நாடு | வெளிநாடு |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | 5-00 | 9-00 |
| இரண்டு ஆண்டு | 10-00 | 18-00 |

*சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்ப வேண்டும்.*

### முஸ்லிம் முரசு

18, ராமசாமித் தெரு, மண்ணடி, சென்னை-1.

# ஞானதேயம்



"முடியாது! முடியாது! முடியாது!" — ஒரு தடவைக்கு மூன்று தடவையாக முழங்கி தன் விருப்பமின்மையை அழுத்தமாகத் தெரிவித்தான் ஜுபைர்

"இதோ பாரு, ஜுபைர். அழகும் பணமுமுள்ள பெண்களை நீ மனைவியா அடையறதிலே எங்களுக்கு எந்தவிதமான விருப்பு வெறுப்புமில்லே. நாங்க இன்னைக்கோ நாளைக்கோ எங்க கடமையை முடிச்சுக்கிட்டு போய்டுவோம். வர்ற வளோட வாழப்போறது நீதான். உன் வாழ்க்கை சிறப்பா அமையணுமென்றுதான் நாங்க ஆசைப்படறோம்" என்று அமைதியாகப் பேசினாள் ஆமினா.

ஜுபைரின் சீற்றம் இன்னும் கடுமையாயிற்று. "அதுக்காக கண் தெரிஞ்சு கிணத்துலே விழச் சொல்றீங்களாம்மா?"

"டேய் ஜுபைர்! ஏதோ எங்க பங்குக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லிட்டோம். இனிமே உன்னிஷ்டம்." குறுக்கிட்ட அப்துல்லா ஆமினாவிடம் கூறினார்: "ஆமினா, பொண்ணு பிடிக்கலேன்னு மதார்பாவாக்குச் சொல்லியனுப்பிடு!"

ஜுபைரின் தங்கை சலீமா தன் அண்ணனின் தோளைக் கனிவோடு வருடியவாறே கேட்டாள்: "ஏண்ணே? எப்பவாவது லேசான மயக்கம் வரும்ங்கிறதினாலே பார்த்துப் பேசி முடிவு செஞ்ச ஒரு பெண்ணை வேண்டாம்னு சொல்லிட்டா அது எவ்வளவு வேதனையை அவங்களுக்குக் கொடுக்கும்னு கொஞ்சம் யோசிச்சுப் பாருங்கண்ணே!"

"நீ மகாமனுஷி! உனக்கு எல்லாம் தெரியும் பாரு!" என்று சலீமாவுக்கு ஒரு பதிலடி கொடுத்து விட்டுத் திரும்பிய ஜுபைர், "ஏழைக் குடும்பத்துப் பெண்ணுன்னு சொன்னீங்க, சம்மதிச்சேன. கட்டிக கொடுக்க வசதியில்லாத நிலைன்னு சொன்னீங்க, இரக்கப்பட்டேன இப்போ எப்போதாவது லேசான மயக்கம் வரும்ங்கறீங்க! நாளைக்கு வலிப்பே வந்தாலும் ஆச்சரியப்படறதிக்கில்லையே!" என்று அனைவருக்கும் பொதுவாகக் கூறி விட்டு வெளியேறிய ஜுபைருக்கு 'அஸ்தஃபிருல்லாஹ்' என்ற ஆமினாவின் குரல் காதில விழத்தான் செய்தது. ஆனாலும் அவனுக்கு அதைப் பற்றி என்ன கவலை?

தையல் மெஷினின் கைப்பிடியை இடக்கையால் சுழற்றியபடி தீவிரமான சிந்தனையோடு சலீமாவுக்கு ஒரு ரவிக்கை தைத்துக் கொண்டிருந்தாள் ஆமினா. ஆயினும் மனம் என்னவோ, அந்த மதார் பாவாவின் மகள் சபியாவையே நினைத்து உருகிக் கொண்டிருந்தது.

பத்து நாட்களுக்கு முன்பு மதார் பாவாவின் மகளொருத்தி சடங்காகி பல வருடங்களாகியும் திருமணச் சந்தைக்கு வரத்தவறி வீட்டுக்குள் வளையவரும் செய்தி ஆமினாவுக்குக் கிடைத்தது.

'தூயவன்'

அவளுக்குத் தெரியும், ஒரு குமரின் வாழ்வு பூரணமடைவதற்குள் எத்தனை துயரங்களை அவள் ஏற்கவேண்டியிருக்கிறது என்ற உண்மை. செய்தியறிந்த ஆமினுவின் இதயம் நெக்குவிட்டு உருகியதின் விளைவாக மறுநாளே பெண்பார்க்கும் படலம் நிகழ்ந்தது. பெண்ணின் அடக்கமும் அளவோடிருந்த அழகும் ஆமினுவின் இதயத்தில் இவள்தான் நமக்கு மருமகள் என்ற எண்ணத்தை உறுதியாக்கி விட்டது. அவள் அந்த உறுதியின் காரணமாக கூறிவிட்டு வந்த வார்த்தைகள் அந்த வீட்டுக்கே விளக்கேற்றி வைத்து விட்டது!

செய்தியறிந்த அப்துல்லா மனைவியின் புனிதமான நோக்கத்தைக் கண்டு மனம் மகிழ்ந்ததோடு மதார் பாவாவிடமும் 'கவலையை விடுங்கள், சபியாவுக்கு வழிசெய்ய நானுயிற்று' என்று கூறிவிட்டார். இதன் விளைவாக மதார் பாவாவின் குடும்பம் புதுக் களை பெற்றுவிட்டது என்ருல் அதுமிகையே அல்ல.

ஜுபைரும் மறுக்கவில்லை. பணம் இல்லை என்ற ஒரே குறையைத் தவிர வேறெதுவும் இல்லாதவரை சரி என்று கூறிவிட்டான். சலீமாவுக்கும் பூரிப்புதான், தனக்கு அண்ணியாக வருபவள் அடக்கமுடையவள் என்கிற வகையில். எல்லா விஷயத்திலுமே எரிந்து விழுகிற முன் கோபக்கார மகனே எந்த விதமான ஆட்சேபணையுமின்றி சம்மதித்து விட்ட வகையில் ஆமினுவுக்கும் அப்துல்லாவுக்கும் சொல்லி மாளாத பூரிப்புதான். ஆனுல்—

திருமணத்துக்கு நாள் குறிப்பதற்காக அங்கே போயிருந்த ஆமினுவின் கண்ணெதிரிலேயே சபியா மூர்ச்சித்து விழுந்தாள். ஆமினுவைத்தவிர அங்கே யாரும் பெரிதும் அதிர்ச்சியடையவில்லை. 'என்ன இப்படித் திடீரென்று?' என வினவிய ஆமினுவுக்கு, 'நாங்கள் அன்றைக்கே சொன்னேமே இப்படி அடிக்கடி லேசான மயக்கம் வரும்என்று' என பதிலிறுத்தார்கள் மற்றவர்கள். ஆமினுவுக்கும் அப்போதுதான் அது ஞாபகம் வந்தது. 'பரவாயில்லை, டாக்டரிடம் காட்டிக் கொள்ளலாம்' என்ற முத்தாய்ப்புடன் திருமணத்துக்கு நாள் பார்த்து விட்டு வீடு திரும்பினுள்.

பிறகுதான் நிகழ்ந்தது பிரளயம்! சபியாவின் வீட்டுக்கும் பெண் பிடிக்கவில்லை என்ற செய்தி போய்விட்டது. அங்கேயும் நிகழ்ந்திருக்கும் ஒரு சூருவளி. ஆனுல், அனைவரின் இதயத்திலும் எழுந்திருந்த கற்பனைக்கோட்டைகளைத் தன் ஒரே ஒரு வார்த்தையால் இடித்தெறிந்துவிட்ட ஜுபைரின இதயத்தில் மாத்திரம் எந்தச் சலனமுமில்லை. மாருக, அது எதிர்காலமனைவியாய் ஓர்எழிலுருவத்தைக் கற்பனை செய்து கொண்டிருந்தது.



அடுத்த மூன்றும் நாள் ரங்கூன் ராவுத்தர் என்ற அடைமொழிப் பெயருடன் ஊரில் பிரபலமாகியிருந்த ஒரு பெருந்தனக்காரரின் வீட்டிலிருந்து ஜுபைருக்குப் பெண்பேசி வந்ததுதான், வந்தது! ஜுபைர் குதி குதியென்று குதித்துவிட்டான.

'உங்கள் பேச்சைக்கேட்டு அந்த சிக்காளிப் பெண்ணைக் கட்டியிருந்தால் என் வாழ்க்கையே நாசமாகியிருக்கும்' என்று அனைவரையும் குற்றம் சாட்டியதோடு, 'பெரிய இடத்துப் பெண். உட்கார்ந்து சாப்பிட்டாலும் இரண்டு தலைமுறைக்கு வரும் சொத்து இதைவிட்டு விட்டு உட்கார்ந்திருக்க நான் ஒன்றும் மடையனல்ல' என்று கூறி ஆமினுவையும் அங்கே அனுப்பிவைத்தான்.

ரங்கூன் ராவுத்தரின் வீட்டுக்குப் போய்விட்டு ஒரு மணி நேரத்தில் திரும்பிய ஆமினு,



'நீ விரும்பிய மாதிரி நல்ல அழகிதான், ஜுபைர்!' என்று ஒரே வார்த்தையில் கூறிவிட்டாள.

அப்புறமென்ன? வீட்டில் ஜுபைரின் குரல் ஓங்கி ஒலிக்கத்தொடங்கிய மூன்றும் நாளே கல்யாண ஏற்பாடுகள் தொடங்கிவிட்டன. அதேசமயம் அழுது வடிந்து கொண்டிருந்த மதார் பாவா வீட்டில் சபியாவின் இதயம் புலம்பித் தவித்ததை யாரும் அறியமாட்டார்கள்தான்!

எந்த விஷயமுமே தொடக்கமின்றி இருந்துவிடும் போது அதன் விளைவுகள் யாரையும் எதுவும் செய்து விடுவதில்லை. தொடங்கிவிட்டு தோல்வியுறும் போது அதனுல் ஒருசாரர் பாதிக்கப்படுவதிலும் ஐயமில்லை. இதே போலத்தான சபியாவின் நிலையும். நினைப்பின் சுகத்தில் நீந்திக்கொண்டிருந்த அவளின் இதயம் பேரிடியொன்ருல் துவண்டு விட்டிருந்தது, பாவம்!

கணவனின் அற்பசொற்ப வருமானத்தைச் சேமித்து வைத்து ஒரு தையல் மெஷின் வாங்கி வாழ்க்கையைத் தொடங்கியவள் தான ஆமினு. இருக்கிற இடமே தெரியாமல் நசித்துக் கிடந்த குடும்பம் வெளியே தலைகாட்டத் தொடங்கியது, ஜுபைரின் கல்லூரிப் பிரவேசத்துக்குப் பிறகுதான். கண்ணியமான ஒரு வேலையுடன் அவனும் சம்பாதிக்கத் தொடங்கிவிட்ட பின்பு குடிக்கிற கூழுக்குக் கொஞ்சம் நிலமும், இருக்கிற இடத்துக்கு ஒரு வீடும் சேர்ந்துவிட்டது. இதன் காரணமாக ஜுபைரின் இதயத்தில் தனையும் மீறி வளர்ந்திருந்த ஓர் ஆணவம் தான், உயர்குடும்பத்துச் சம்பந்தத்தை நாடிற்று.

ஜுபைரின் விருப்படியே திருமணமும் நிறைவேறிவிட்டது. அப்துல்லாவுக்கோ, ஆமினுவுக்கோ, சலீமாவுக்கோ விருப்பு

மில்லாத வெறுப்புமில்லாத ஒரு மனநிலை. எப்படியோ காரியங்கள் சிறப்பாக முடிந்து விட்டன.

முதலிரவு.

காற்றில் இழை பிரிந்து மணம் வீசும் பத்திகளின் வாடையும், புத்தாடைகளின் ஒரு புதுவித மான மணமும், சரசரக்கும் ஆடைகளும், கண்ணைப்பறிக்கும் உள்ளலங்காரமும் அது ஒருமண வீட்டின் தனியறை என்பதற்குக் கட்டியம் கூறிக் கொண்டிருந்தன.

நெஞ்சுகொள்ளாத ஆசையும் ஆவலும் கால்களைப் பின்ன உள்ளே நுழைந்த ஜுபைருக்கு, சுற்றுச் சூழலின் புதுமையும் அழகும் ஒரு சுகானுபவத்தைத் தந்தன. தன்னுடைய எண்ணங்கள் எல்லாம் எவ்வித மான தடையுமின்றி நிகழ்ந்து முடிந்துவிட்டதில் அவனுக்குப் பரம திருப்திதான். மணமகள் துவண்டிருந்த பந்தற்கட்டிலை நெருங்கினான், மெல்ல.

வீட்டின் உள் ஹாலில் திருமண சந்தடிகள் சற்றே அடங்கிய நிலையில் ஒரு தலையணையை தலைக்கு வைத்துக் கொண்டு கண்ணயர்ந்திருந்தாள் ஆமினா. திடீரென எழுந்த கூச்சலும் சப்தமும் அவளைத் திடுக்கிட்டு எழ வைத்தது ஒரே அமளிதுமளி என்னவென்றே தெரியாத —ஒரு குழப்பம்.

'மாப்பிள்ளையின் தாயார் எங்கே?' என்றொரு குரல். ஆமினா விழுந்தடித்துக் கொண்டு ஓடினாள் மாடிக்கு. அங்கே ஜுபைர் கோபத்தால் கொதிப்பேறிய நிலையில் நின்று கொண்டு 'கேட்டீங்களாம்மா? நம்மை ஏமாத்திட்டாங்க இவங்க! மோசம் பண்ணிட்டாங்கம்மா!' என்று கத்தினான். 'என்னடா விஷயம்?' என்று ஆமினா கேட்டதும் "உட்புறம் கையைக் காட்டினான் ஜுபைர்!

அங்கே மணமகள் ஒரு நாற்காலியில் கிடந்தாள். வாயில் சற்றே நுரை பொங்கி, முகம் விகாரமாக வலித்திருந்தது. கையும் காலும் இலேசாக உதறிக் கொண்டிருந்தது. திடுக்கிட்டாள் ஆமினா.

'இப்ப என்ன ஆய்டுச்சுன்னு இப்படிக் கத்தறீங்க? லேசா எப்பவாவது வலிப்பு வந்தா என்ன? மனுஷருக்கு நோய் நொடியே கிடையாதா? ஏன் சொல்லலேன்னு கேட்கறீங்க? இதெல்லாம் ஒரு பெரிய விஷயமா, சொல்லிக்கிட்டிருக்க? சொல்றதாயிருந்தா உங்களை ஏன் மாப்பிள்ளை பார்க்குறோம், லட்சாதிபதியைப் பார்த்திருப்போமே?' என்று சத்தம் போட்டு அனைவரையும் கலைத்தவர் ரங்கூன் ராவுத்தர்தான்.

ஜுபைர் எதுவும் பேசவில்லை. ஆமினாவை நிமிர்ந்துபார்த்தான். அவளோ தலைகுனிந்து மௌனமாக நின்றாள். மூர்ச்சித்திருந்த மணமகள் மெல்ல கண்விழித்தாள்.

சபியாவை உதறியெறிந்தது போல அவனால் இவளையும் உதறமுடியாது. திருமணம் என்கிற பந்தம் இருவரையும் சுற்றி உருவில்லாமல் படர்ந்திருக்கிறதே!

நினைவின் மயக்கத்தில் இதுவரை சிக்குண்டிருந்த ஜுபைருக்கு இப்போதுதான் ஞானோதயம் பிறந்தது. என்ன செய்வது? அதுகாலம் கடந்த ஞானமாகிவிட்டதே!

# பயணத்தின் முடிவு

"மஹதி"



அகிலங்களுக்கோர் அருட்கொடையாகவும், அனைத்துலக மக்களுக்கும் அழகிய முன்மாதிரியாகவும் வந்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் புனிதப் பிரசாரம், மக்கமா நகரிலும், அக்கம் பக்கத்து ஊர்களிலும் சூருவளியைக் கிளப்பியிருந்த காலம்.

அரபிப் பாலை,

கண்ணுக்கு எட்டிய தூரம் ஒரே மணற் பரப்பு. தீக்கணைகளைப் வீசுவதைப் போல் கதிரவன், கிரணங்களைப் பாய்ச்சிக் கொண்டிருந்தான். மலையும், மடுவுமாகக் காட்சியளித்த அம் மணற்பரப்பிலிருந்து ஆவி கிளம்பிக் கொண்டிருந்தது.

மூன்று ஒட்டகங்களின் மீது மூவர், மக்கமா நகரை நோக்கிப் போய்க்கொண்டிருந்தனர். ஒட்டகங்களின் முதுகின் மீது கட்டப்பட்ட பட்டுக் கூடாரங்களிலே அவர்கள் பட்டாடைகளை அணிந்த வண்ணம் அமர்ந்திருந்தனர்.

முதல் ஒட்டகத்தின் மீது அறுபது வயது நிரம்பிய முதியவர். இரண்டாவதின் மீது அவர் தம்பி. மூன்ருவதின் மீது முதலாமவரின் மகன். வயது இருபத்தைந்தே இருக்கும். கொச்சையான காமப் பாட்டுகளை முணுமுணுத்தவாறு இருந்தான். அவன் மட்டும் உற்சாகமாகக் காணப்பட்டான். அவன் ஒட்டகத்தின் பின்புறமாகத் திரும்பி உட்கார்ந்திருந்தான். அம்மூவர் இடுப்பிலும் இரண்டிரண்டு வாட்கள் தொங்கிக் கொண்டிருந்தன. அருகிலேயே கேடயங்களும் வைக்கப்பட்டிருந்தன.

அம் மூவரும் ஜவுளி வியாபாரிகள். ஷாம் நாட்டுக்குச் சென்று வாணிபம் செய்து பொருள் ஈட்டிக்கொண்டு, பணத்தை வெகு ஜாக்கிரதையாக ஒட்டகங்களின் மீது வைத்துக் கட்டிக்கொண்டு ஊர் திரும்பிக் கொண்டிருந்தனர். மூவரும் முஸ்லிம்களில்லை.

முதலாமவர், ஊர் திரும்பியதும் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தார். அவருக்குப் பத்து மனைவிகள் இருந்தனர். ஒருத்தி இளம் வயதினள்; நல்ல அழகி. குடும்பத்தைக் கவனித்துக் கொள்ள மூத்த மனைவி மக்கமா நகரில் விட்டு வந்திருந்தார். அவனுக்குக் கலியாணம் ஆகியிருந்தது. இரண்டு மனைவிகளும் இருந்தனர்.

இரண்டாவது ஒட்டகத்தின் மீதிருந்த அவர் தம்பிக்குப் பெண் குழந்தை பிறந்திருப்பதாகச் செய்தி கிடைத்தது. அக் குழந்தையை உயிரோடு புதைத்து விடும்படிக் கட்டளை அனுப்பியிருந்தார். அக் குழந்தையைத் தம் மனைவி கொன்று விட்டாளா இல்லையா என்று

தெரிந்துகொள்ள முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார். பெண் குழந்தை பிறந்தால் அந்தக் காலத்தில் பேரவமானம்.

ஊர் திரும்பியதும் தனக்குக் கலியாணம் நடக்கப் போவதை எண்ணி எண்ணி இன்பக் கனவுகள் கண்டபடி காதல் பாட்டுக்களை உரக்கப் பாட ஆரம்பித்தான், கடைசி ஒட்டகத்தில் அமர்ந்திருந்த இளைஞன்.

அவன் சச்சா காதுகளில் அப்பாட்டுக்கள் விழுந்தன. அவர், தம் அண்ணனை நோக்கிக் கூறினார்:

"ஊர் போனதும் இந்தப்பயலுக்குக் கலியாணம் செய்து வைத்துவிட வேண்டும்."

முதல் ஒட்டகத்தில் இருந்த முதியவர், திரும்பித் தம் மகன் மீது ஒரு கூர்மையான பார்வையை வீசினார்.

"ஒழுக்கங்கெட்டபயல்! இவன் எனக்கு மகனாகப் பிறந்தானே! வெட்கம்! வெட்கம்! இவன் தாய் மட்டும் உயிரோடு இல்லாவிட்டால் இவன் கழுத்தை நெறித்துக் கொன்று விடுவேன். மூத்த பயல் என்ன என்ன செய்து வைத்திருக்கிறானோ! யார் கண்டார்கள்?" என்று நீண்ட பெருமூச்சு விட்டார்.

இளைஞன் காதில் அச்சொற்கள் விழுந்தன. பாட்டை நிறுத்திப் பற்களை 'நறநற'வென்று கடித்தான். அவன் முகத்தில் இப்போது எள்ளும், கொள்ளும் வெடித்தது! தன் தாடியைக் கோதிவிட்டுக் கொண்டான். அப்படிக் கோதினால் அவன் ஒரு முடிவான தீர்மானத்துக்கு வந்துவிட்டான் என்று அர்த்தம்.

ஒட்டகங்கள் மூன்றும் மேட்டிலிருந்து பள்ளத்தை நோக்கி இறங்கின.

நெற்றியில் துளிர்த்த வியர்வையை வழித்துக் கொதிக்கும் மணலில் வீசினான் இளைஞன். மற்ற இருவரும் போர்வைகளால் தங்கள் முகங்களைத் துடைத்துக் கொண்டனர்.

தூரத்திலே மக்காவிலிருந்து வரும் ஒரு ஒட்டகக் கூட்டம் தென்பட்டது.

"அந்தக் 'காபிலா'வில் எத்தனை ஒட்டகங்கள் இருக்கும்?" என்று வினவினார் முதலாமவர். அவர் தம்பி, கண்கள் மீது வெயில் விழா வண்ணம் கை வைத்து எதிரே கூர்மையாக நோக்கினார்; இளைஞனும் திரும்பிக் கூர்ந்து கவனித்தான்.

"காபிலா தூரத்தில் இருப்பதால் சரியாக எண்ணமுடியவில்லை" என்றார் இரண்டாமவர்.

"எதற்கும் நாம் ஆயத்தமாக இருக்க வேண்டும்" என்று தம் உடைவாளை உருவினார் முதியவர். பணம் கட்டி வைக்கப்பட்டிருக்கும் பையைத் தடவிப் பார்த்துக்கொண்டார்.

'ஏன் வீணாகப் பயப்படுகிறீர்கள்? ஒட்டகங்கள் அதிகமாகக் காணப்படுவதால் அது திருடர் கூட்டமாக இருக்காது. மக்காவிலிருந்து ஷாம் தேசம் செல்லும் வியாபாரிகளாயிருப்பார்கள்." தீர்மானமாகக் கூறினான் இளைஞன்.

ஒரு கணம் மூவரும் மௌனமாயினர்.

"அப்படியானால் விரைந்து சென்று அவர்கள் நமக்குத் தெரிந்தவர்களாயிருந்தால் நம் குடும்பங்களைப் பற்றித் தகவல் களைத்தெரிந்துகொள்ளலாமே!" என்றார் இரண்டாமவர். தம் மனைவி பெண் குழந்தையைக் கொன்றுவிட்டாளா, இல்லையா

## தாடியின் பயன்!

ஜார்ஜ் பெர்னார்ட்ஷா தாம் இறக்கும் வரையில் தாடி வைத்திருந்தார். 'எதற்காக அவர் வைத்துக்கொண்டிருக்கிறார்?' என்ற ஓர் ஐயம் ஏற்பட்டது பத்திரிகை நிருபர் ஒருவருக்கு.

ஒரு நாள் அந்த நிருபர் ஷாவை அணுகி, "எதற்காகத் தாங்கள் தாடி வைத்துக்கொண்டிருக்கிறீர்கள்? தாடி வைத்துக்கொண்டிருப்பதால் இலாபம் உண்டு என்று தாங்கள் எண்ணுகிறீர்களா?" என்று கேட்டார்.

"சந்தேகமில்லாமல்" என்றார் ஷா.

"எப்படி?" என்று கேட்டார் நிருபர்.

"இளைஞரே! நான் க்ஷவரம் பண்ணிக் கொள்வதற்காகச் செலவிட்டிருக்க வேண்டிய நேரத்தில் நிச்சயமாக ஒரு நாடகமாவது எழுதியிருப்பேன், இல்லையா?"

நூல்: படியுங்கள் சுவையுங்கள். ஆசிரியர்: அப்துற்-றஹீம்.

---

என்று அறிந்து கொள்ள அவருக்கு ஆவல்.

மூவரும் ஒட்டகங்களை முடுக்கினர். சிறிது நேரத்தில் ஒட்டகக் கூட்டத்தை அணுகினர். இம் மூவரும் வாட்களை உருவிய வண்ணம் விரைந்து வருவதைக்கண்ட ஒட்டகக் கூட்டத்தினர், தங்கள் காபிலாவை இருந்த இடத்திலேயே நிறுத்திக் கைகளில் வாட்களும், ஈட்டிகளும் ஏந்திய வண்ணம் கீழே இறங்கினர். இம் மூவரும் வழிப்பறிக்காரர்களாயிருப்பார்களோ என்று அவர்களுக்கு ஐயம்.

சமீபத்தில் வந்த பின் இரு தரப்பினரும் ஒருவரை ஒருவர் அறிந்து கொண்டனர். உறவினர் ஆகையால் ஒருவரை ஒருவர் மார்புறத் தழுவி ஆனந்தம் அடைந்தனர். விஷயங்களை விசாரித்துக் கொண்டனர்.

"பெண் குழந்தையைக் கொல்லவில்லை. நல்ல அழகாயிருந்ததால் நல்ல விலைக்கு யாருக்கோ விற்று விட்டாள் உங்கள் மனைவி" என்று ஒருவர் கூறவே, இரண்டாமவர் சிறிது நிம்மதியடைந்தார்.

"எப்படியாவது தொலைந்தால் போதும் பீடை!" என்றார்.

முதியவருக்கு பேரதிர்ச்சி காத்திருந்தது. அவருடைய இளம் மனைவி அழகாயிருந்ததால், அவர் மூத்த மகன ஆசைப்பட்டு தன் தந்தை ஷாம் நாட்டிலேயே இறந்துவிட்டதாகப் புரளியைக் கிளப்பி விட்டுச் சடங்குகளும் செய்து, அப் பெண் மீது தன் போர்வையைப்போர்த்து எல்லா சொத்துக்களோடும் அவளைத் தன் மனைவியாக்கி அழைத்துக் கொண்டு வேற்றூருக்குச் சென்று விட்டதாகக்கேள்வியுற்றார். இது அக்கால வழக்கம்.

அவர் மூர்ச்சையுற்றார்.

தம்பி அவர் முகத்தில் தண்ணீர் தெளித்து அண்ணன் மூர்ச்சையைத் தெளியவைத்தார்.

"குடிப்பதற்காக இருந்த கொஞ்சம் தண்ணீரையும்

வீணுக்கி விட்டீர்களே!'' என்று தன் சிறிய தந்தையைக் கோபித் கொண்டான் இளைஞன்.

''வாயை மூடு! தந்தை மீது எத்தகைய வாஞ்சை இருக்கிறது பிள்ளைக்கு!'' என்று கடிந்து கொண்டார் சிறிய தந்தை.

சிறிது நேரம் கழித்து இரு கூட்டத்தினரும் விடைபெற்றுப் பிரிந்து தத்தம் திசையை நோக்கிப் பயணப்பட்டனர்.

முதியவர் வேதனையால் வெதும்பிக்கொண்டிருந்தார். அவர் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் வழிந்து ஓடிக்கொண்டிருந்தது. ஊர் சென்றவுடன் மூத்த மகனைக் கண்டுபிடித்து அவனை வெட்டிச்சாய்த்து விட்டுத்தான் மறுகாரியம் பார்க்க வேண்டும் என்று சூளுரைத்துக் கொண்டார்.

இளையவர், அண்ணனுக்காக அனுதாபம் கொண்டிருந்தார். இளைஞனோ சலனமற்ற முகத்துடன் காணப்பட்டான்.

அன்று இரவு.

வழியில் தென்பட்ட நீர்நிலை ஒன்றின் கரைமீது மூவரும் தங்கினர். நான்கு கற்களை ஒட்டகங்கள் மீதிருந்து இறக்கினர். ஒன்றை வணங்கினர் மூன்றை அடுப்பாக்கி ரொட்டி சுட்டுத் தின்றனர் தவணை வைத்துக் காவல் இருந்தனர். இளைஞனின் தவணை பின்னிரவில் இருந்தது.

இரவு இரண்டு மணிக்குமேல் எழுந்து முதியவர், தம் மகனை எழுப்பி விழித்துக் கொள்ளும்படி ஆணையிட்டார், அவன் கண்களைக் கசக்கியபடி எழுந்து உட்கார்ந்து. மீண்டும் படுக்கை

## வாழ்க மணமக்கள்!



எழுத்தாளரும் சொற்பொழிவாளருமான அபிவிர்த்தீஸ்வரம் டி. எம். எம். தாஜுத்தீனுக்கும், அல்ஹாஜ் ஆ அப்துல் ரஹீம் அவர்களின் செல்வி அஸ்மா நாச்சியாருக்கும் 4—7—66 வைகறையில் திருமணம் நிகழ்ந்தது மணமக்களை வாழ்த்தி அரசியல் தலைவர்கள், அமைச்சர்கள், கலையுலகினர், பத்திரிகாதிபர்கள் ஆகியோர் வெளிநாட்டு உள்நாட்டிலிருந்து வாழ்த்துத் தந்திகளும் பரிசுப் பொருள்களும் அனுப்பினர்.

மணமக்கள் எல்லா நலனும் பெற்று சீரும் சிறப்போடும் நீடூழி வாழ்க!

யில் சாய்ந்து விட்டான். ஓங்கி அவன் கன்னத்தில் அறைந்தார் முதியவர். இளைஞன் துள்ளி எழுந்தான். தந்தையை முறைத்துப் பார்த்து விட்டு வாளை உருவிக் கையில் வைத்துக் கொண்டு ஈச்சமரத்தில் சாய்ந்து உட்கார்ந்தான்.

"மீண்டும் தூங்கிப் போகாதே! தூங்கு மூஞ்சி! ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்!" என்று கூறி விட்டுப் படுக்கைக்குச் சென்றார் முதியவர்.

தேய்பிறை, மங்கிய தண்ணொளி வீசிக் கொண்டிருந்தது. வானம் நிர்மலமாகக் காட்சியளித்தது. மணற்பரப்பு, நிலவில் வெண் துப்பட்டியைப் போல் தோற்றமளித்தது.

ஒருமணி நேரம் கழிந்திருக்கும். அதுவரை புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்த முதியவர் உறக்கத்தில் ஆழ்ந்தார். இரண்டாமவரோ குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார்.

காவல் இருந்த இளைஞன் எழுந்தான். நாலா திசையும் நோக்கினான். தன் தந்தையை நெருங்கினான். வாளை ஓங்கி ஒரே வீச்சில் அவர் தலையைத் துண்டித்தான். அடுத்த கணத்திலேயே தன் சச்சாவையும் தீர்த்துக் கட்டினான். அவசர அவசரமாகக் குழியைப் பறித்து இருவர் சடலங்களையும் அதில் தள்ளி மணலால் மூடினான். ஒட்டகங்களை அவிழ்த்து ஓட்டிக் கொண்டுப் புறப்பட்டான். ஒட்டகங்கள் மெல்லமெல்லக் காலடி எடுத்துவைக்கவே அவற்றைப் பலமாக அடித்தான். அவை விரைந்தன.

பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. இளைஞன் முதல் ஒட்டகத்தில் அமர்ந்தவாறு மற்ற இரு ஒட்டகங்களின் மூக்கணாங்கயிறுகளையும் பிடித்து அழைத்துச் சென்று கொண்டிருந்தான். இப்போது அவன் போகும் திசை மாறியிருந்தது. மதீனாவை நோக்கி அவன் பயணப்பட்டிருந்தான்.

மக்காவில் இப்போது என்ன இருக்கிறது? அவன் அண்ணனே எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு எங்கோ ஓடி விட்டான். இப்போது அவன் தந்தையும், சச்சாவும் சேர்ந்து ஷாம் நாட்டில் திரட்டிய திரண்ட செல்வம் அவன் கையில் இருந்தது. மதீனாவில் புதிய வாழ்வைத் தொடங்கப் போகும் ஆனந்தத்தில் அவன் முகம் மலர்ந்து காணப்பட்டது.

மதீனமா நகரில் (அப்போது அது யத்ரிப் என்றே அழைக்கப் பெற்று வந்தது) அவன் நுழையும் போது எங்கும் ஒரே பரபரப்புக் காணப்பட்டது. 'என்ன செய்தி?' என்று விசாரித்தான்.

(அடுத்த இதழில் முடிவுறும்)

---



**J. பாரூக்**

திருவாரூர் — விஜயபுரம் கருணாநிதி அச்சக உரிமையாளர் கருணை. எம். ஜமால் அவர்களின் முதல் மகன் அண்மையில் B. Com. தேர்வில் வெற்றி பெற்றுள்ளார்.

548. தள்ளப்படுவதற்கு முன் நீ விழாதே!
—இங்கிலாந்து.

549. எங்கு ஒரு பெண் சீழ்க்கையடிக்கிருளோ, அங்கு ஏழு கோயில்கள் நடுங்குகின்றன.
—ஸெக்கோஸ்லோவாக்கியா.

550. சத்தியத்தைத் தவிர வேறெதுவும் அழகில்லை.
—பிரான்ஸ்.

551. ஒருவனுடைய இதயத்தைவிட மேலான சாட்சி வேறில்லை. —ஜெர்மனி.

552. நீ போருக்குச் செல்லும் போது ஒரு தடவை பிரார்த்தனை செய்; கடற்பிரயாணத்திற்குச் செல்லும் போது இரண்டு தடவை பிரார்த்தனை செய்; ஒரு பெண்ணை மனைவியாக ஏற்றுக் கொள்ளும் போது மூன்று தடவை பிரார்த்தனை செய். —ஜெர்மனி.

553. சுதந்திரம் விலை மதிப்பற்றது. —ஸ்பெய்ன்.

554. காலிப் பை நிமிர்ந்து நிற்க முடியாது.
—இங்கிலாந்து.

555. ஏழைக்கு அதிகம் வேண்டும்; கஞ்சனுக்கு எல்லாம் வேண்டும். —டென்மார்க்.

556. வேறொருவனிடம் நீ சொல்ல விரும்புவதை முதலில் உனக்குச் சொல்லிப் பார்.
—எஸ்த்தோனியா.

557. கீர்த்தி நீர் மேல் வட்டம்போல் பெரிதாகிப் பின்னர் மறைந்து விடுகிறது. —ஜெர்மனி

558. அபாயமின்றி அபாயத்தைத் தாண்ட முடியாது.
—இத்தாலி.

559. வயோதிகர்களுக்குச் சேவை செய்வது கடமை. ஒத்த வயதுடையோருக்குச் சேவை செய்வது கருணை; இளையவர்களுக்குச் சேவை செய்வது பணிவு. —யுகோஸ்லாவியா.

# ஆயிரம்

560. கொடுப்பவன் ஒரு போதும் நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது; பெறுபவன் ஒரு போதும் மறக்கக் கூடாது. —ஹீப்ரு.

561. கோபத்தை அடக்கி ஆள்க. —கிரீஸ்.

562. விஷயம் எதுவுமில்லாமல் ஒருவன் நீண்ட நேரம் பேசலாம். —ஜெர்மனி.

563. அறிஞர்கள் ஞானத்தைத் தேடுகிறார்கள்; முட்டாள் அதைப்பெற்று விட்டதாக நினைக்கிறான். —ஜெர்மனி.

564. கலைகளுக்கெல்லாம் அடிப்படை கலப்பை. —இந்தியா (பஞ்சாப்)

565. அத்திப் பூவையும் வெள்ளைக் காகத்தையும், நீரிலிருக்கும் மீனின் பாதத்தையும் ஒருவன் பார்க்கலாம். ஆனால் ஒரு பெண்ணின் மனத்தில் இருப்பதைப் பார்க்க முடியாது. —இந்தியா (சம்ஸ்கிருதம்)

566. எளிமையே சிறந்த ஆடம்பரம். —ஜப்பான்.

567. வாக்களிப்பது, கடன் படுதல். —இங்கிலாந்து.

568. பணக்காரர்களிடம் பணம் இருக்கிறது; ஏழைகளிடம் மன அமைதி இருக்கிறது. —எஸ்த்தோனியா.

569. மூன்று விஷயங்கள் சந்தோஷ வாழ்க்கைக்குரியவை: சென்றதை மறப்பது, நிகழ்காலத்தை நேர்வழியில் செலுத்துவது, வருங்காலத்தைப் பற்றிச் சிந்திப்பது. —ஜெர்மனி.

570. பெண்கள் முடிந்த சமயத்தில் சிரிக்கிறார்கள். —ஜெர்மனி.

(தேர்ந்த தமிழாக்கியவர்: எஸ். ஏ. சுலைமான், M. A.)

# வாழ்க மணமக்கள் !



திருப்பூர் தளபதி ஏ. எம். முகையத்தீன் அவர்களின் புதல்வி சபுருன்னிஸா பீவிக்கும், சேலம் ஜில்லா பரமத்தி வேலூர் எஸ். சாயபு ராவுத்தர் புதல்வர் சேட் என்கிற எஸ். எஸ். காதர் முகைதீன் அவர்களுக்கும் 10—7—66ல் திருப்பூர் பெரிய மஸ்ஜிதில் சிறப்பான முறையில் திருமணம் நிகழ்ந்தது.



திருச்சி எழுத்தாளர் டி. எஸ். ஏ. ரசூல் அவர்களின் மூத்த புதல்விக்கு 3—7—66 ஞாயிறு மாலை சங்கிலியாண்டபுரம் மதனி மஸ்ஜிதில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.



வலங்கைமான் அ. சி. ரைஸ்மில் பங்காளியும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தலைவருமான ஜனுப் எம். பக்கீர் முகம்மது அவர்களின் புதல்வி கதீஜா பீவிக்கும், ராஜகிரி மர்ஹூம் என். ஏ. அப்துல் ஹமீத் அவர்களின் புதல்வர் முகம்மது பாஷாவுக்கும் 20—6—66ல் ஆவூரில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.



அய்யம்பேட்டை ஜனுப் இ ஹாஜா முஹைதீன் அவர்களின் குமாரர் முகம்மது தாஜுதீனுக்கும், ஹாஜி மு. முகம்மது இபுராஹீம் அவர்களின் செல்வப் புதல்வி ஹைருன்னிஸா பேகத்துக்கும் 3-7-66ல் திருமணம் அய்யம்பேட்டையில் விமரிசையாக நடந்தேறிற்று.



சென்னை பி. எம். பி. முகம்மது தாவூது அவர்களின் புதல்வி அலீமா பீவிக்கும், ஜனுப் கே. எம். எம். அப்துல் கபூர் அவர்களின் புதல்வர் பிரோஸ்கானுக்கும் 16-7-66ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது!



சென்னை இந்தோ—பர்மா ஸ்டேஷனரி அன்டு பேப்பர் ஸ்டோர்ஸ் மானேஜிங் பார்ட்னர் ஏர்வாடி ஜனுப் ஈ. எம். எம். ஜமாலுத்தீன் அவர்களின் செல்வப் புதல்வி ஹாருன்னிஸா பேகத்துக்கும், மேற்படி கம்பெனி பார்ட்னர் ஈ. எம். எம். முகம்மது யூசுப் அவர்களின் புதல்வர் செய்யது மக்பூல் சுல்தானுக்கும் 3—7—66ல் சிறப்பாகத் திருமணம் நிகழ்ந்தேறியது.



சென்னை இரும்பு வியாபாரம் எஸ். எம். அஹமது அவர்களின் புதல்வி முகம்மது ஆயிஷா பேகத்துக்கும் ஹாஜி ஈ. ஏ. எம். எஸ். மரைக்காயர் அவர்களின் புதல்வர் ஹமீருத்தீன் அவர்களுக்கும் 7-7-66ல் குலசேகரப் பட்டினத்தில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது!

# முதுகுளத்தூரில் மணவிழா!

சென்னை இஷாஅத்தே இஸ்லாம் சபையின் கிளைப் பொதுச் செயலாளரும், முஸ்லிம் லீக் பிரமுகருமான அல்ஹாஜ் A. N. H. அப்துல்கனி அவர்களின் செல்வி மீரக்காள் பீவிக்கும், முதுகுளத்தூர் ஜனப் S. P. முகைய தீன் பிச்சை இராவுத்தர் அவர்கள் குமாரர் ஜனப் இராவுத்தர் கனி நைனர் அவர்களுக்கும் 6—7—66 அன்று முதுகுளத்தூர் ஹபீப் மன்ஸிலில் திருமணம் நடைபெற்றது. அவ்வமயம் சொல்லின் செல்வர் ரவணசமுத்திரம் அல்ஹாஜ் ஜனப் M. M. பீர்முகம்மது அவர்கள் மணமக்களை ஆசிர் வதித்துப் பேசினர்கள். நாகர் கோவில் இசையமுது ஜனப் M. S. முஹம்மது ஹுசைன் அவர்கள் இஸ்லாமிய இன் னிசைப் பாடல்கள் பாடி வந் திருந்தோர்களை மகிழ்வித் தார்கள். காயிதே மில்லத் அல் ஹாஜ் M. முஹம்மது இஸ்மா யில் சாகிப் எம். பி. அவர்கள் வாழ்த்து மடல் அனுப்பி இருந்தார்கள். முதுகுளத்தூர் ஹிம்மதுல் இஸ்லாம் வாலிபர் சங்கம், திடல் ஷரீ ஹத்துல் இஸ்லாம் சன்மார்க்க சங்கம் சார்பில் வாழ்த் துக்கள் வாசித்தளிக்கப்பட்டன. மேலும் மலேசியா, மற் றும் ஹாங்காங், ரங்கூன், சிலோன், லண்டன், இந்தியா வின் பல்வேறு பகுதிகளிலிருந்து மணமக்களுக்கு பரிசுப் பொருள்களும், வாழ்த்துத் தந்திகளும் கடிதங் களும் வந்திருந்தன.



மணமகன்

மணமக்கள் எல்லா நலமும் பெற்று நீடூழி வாழ்க!

# அவனிக்கோர் அருட் கொடை!

(காயல்பட்டணம் எஸ். எம். பி. ஹஸீனு பீவி)



அவனியதின் அருட்கொடையாய்
அண்ணலுயர் முகம்மதவர்
அவதரித்த இந்நாளோர்
அரியதொரு திருநாளே!

மாநிலத்தின் மார்பிடமாய்
மக்கநகர் மீதினிலே
மாண்புமிகு அப்துல்லா
மைந்தர்வந்த திருநாளே!

ஒன்றிறையே ஒன்றுகுலம்
என்றஉயர் தத்துவத்தை
வென்றிபெறச் செய்யவந்த
வேந்தர்நபி திருநாளே!

மங்கையினம் மண்ணகத்து
மாட்சியுடன் வாழுதற்கு
மங்களமார் நெறிநல்க
மாநபியார் வருநாளே!

அரசியலைப் பொருளியலை
ஆத்மீக வாழ்வியலைத்
தரத்துடனே காட்டிடவோர்
தலைவர்வந்த திருநாளே!




## 5. ஒரு கூடை மண்!

"இங்கிருந்து நீங்கள் இஸ்லாத்தின் தூதுவர்களாகச் செல்கிறீர்கள். போகுமிடத்தில் கண்ணியமான உடன்பாடு செய்துகொண்டு திரும்பி வாருங்கள்"—

தளபதியார் ஸஅதின் அந்த வார்த்தைகள் நுஃமான் மக்ரானின் நெஞ்சத்தில் ஒலித்தவாறு இருந்தன.

கதிஸிய்யாவிலிருந்து வடக்கே பிரிந்து சென்ற நீண்ட பாட்டையில் தமது புரவியை விரட்டிச்சென்று கொண்டிருந்த அவர் சில கணங்களுக்கு முன்னால் ஸஅதின் விடுதியில் நிகழ்ந்த சந்திப்பின் நினைவிலே மனதைத் தோயவிட்டவராகச் சென்றுகொண்டிருந்தார்.

"என்ன, ஒரேயடியாக மவுனத்தில் ஆழ்ந்துவிட்டீரே! உம்மை ஊமையாக்கிவிட்ட அந்த எண்ணத்தைச் சொல்லக் கூடாதா?"—நுஃமானின் வலது புறம் வந்துகொண்டிருந்த முகீரா ஜாராஹ் உதட்டில் மெல்லிய சிரிப்புடன் கேட்டார்.

"தளபதியார் நமக்குத் தந்துள்ள பொறுப்பைப் பற்றித்தான் என் மனம் சிந்தித்துக் கொண்டிருந்தது. வீணில் மனிதர்களின் இரத்தம் சிந்துவதைத் தடுக்க அவருக்கு எவ்வளவு அக்கறை!"

"கலீபா அவர்களின் கட்டளையும் அப்படித்தானே வந்திருக்கிறது. போருக்கு முன் பாரசீகர்களிடம் சமாதானத் தூது அனுப்ப வேண்டும் என அவர்கள் தளபதியாருக்கு எழுதியிருக்கிறார்கள்."

"மேலும், அவர்களிடம் இஸ்லாத்தின சிறந்த கொள்கைகளைப் பற்றி எடுத்துரைத்து வர வேண்டும் என்றும் கலீபா அவர்கள் எழுதியிருக்கிறார்கள் என்று சொல்லும்!"—முகீரா பேச்சைத் தொடர்ந்தார்.

"அதுவும் அப்பாரசீகர்கள் நமக்கெதிராகப் பகைமையின் உச்சத்திலே நிற்கும் போது செய்து வரவேண்டும், இல்லையா?"

"கலீபா அவர்களின் திடமான நம்பிக்கையைத்தானே அது காட்டுகிறது! எஃகினாலான கூரிய வாளை விட உண்மை யென்னும் உடைவாளால் எதிரிகளை வெல்வது சாத்தியம் என்று அவர்கள் உறுதியாக நம்புகிறார்கள். அந்த நம்பிக்கையை நிறைவாக்கிவரும் பொறுப்பல்லவா நமக்குத் தரப்பட்டிருக்கிறது? பல்லாயிரம் பேர்களிலிருந்து நம் பதினால் வரை மட்டும் தளபதியார் தேர்ந்தெடுத்திருப்பதை எண்ணும் போதுதான்...—" நுஃமான் முகீரவைப் பார்த்தார்.

"எண்ணும் போது என்ன?"

"நம்முடைய பொறுப்பு எத்துணை கடினமானது என்று தெரிகிறது. அதை நாம் நல்ல படியாக முடித்துத் திரும்ப வேண்டுமே!"

"இறைவன் துணை யிருக்கப் போதுமானவன். நம் கடமையை நாம் செவ்வனே செய்து வருவோம். அதன் பலாபலன் அவனைப் பொறுத்தது"—நுஃமானின் இடது மருங்கில் சவாரி செய்துகொண்டிருந்த ஆஸிம் இப்போது உரையாடலில் கலந்துகொண்டார்.

"ஆமாம்! இந்தச் சிறப்பான கடமையைச் செய்துவர நாற்பது கல் என்ன, நாலாயிரம் கல் தொலை வரை கூடச்சென்று வர நான் மலைக்கமாட்டேன்" என்றார் முகீரா, உற்சாகமுடன்.

அதே உற்சாகம் தம்முடைய குரலிலும் தொனிக்க ஆஸிம் கூறினார்:

"நாம் மூவர் மட்டும் அல்ல. அதோ பின்னே வரும் தோழர்களும் எவ்வித தயக்கமுமில்லாமல் வருவார்கள் என்றே நம்புகிறேன்."

அதை மெய்ப்பிப்பது போல, உற்சாகமுடன் அவர்கள் குதிரைகளை விரட்டிவரும் ஒலி எழுந்தது.

தோழர்களின் உள்ளங்களில் துள்ளிய உற்சாகத்தைக்கண்டு பெரிதும் உவகை கொண்டவராகத் தமது புரவியை இன்னும் வேகமாகப் பாய்ந்தோடும்படி தட்டிவிட்டார் நுஃமான். அவரை நெருங்கி வந்த மற்றவர்களும் தங்கள் பரிகளை விரட்டியவாறு விரைந்தனர்.

பல்வேறு கோத்திரத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தபோதிலும், இஸ்லாத்தின் ஒருமையை எடுத்துக்காட்டுவது போல ஒரே சிந்தனையுடன் ஒரே இலக்கான மதாயினை நோக்கிச் சென்றுகொண்டிருந்தனர், அந்த பதினான்கு வீர இளைஞர்களும், அவர்களின் முகங்களிலே உயர் குலத்தின் பண்பு இலங்கியது. ஃபுராத் நதியைத் தாண்டி, அதற்கப்பாலிருந்த சமவெளியைக் கடந்து, தஜ்லா நதியின் மீது நின்ற பாரசீகத் தலைநகரை வெகு விரைவிலேயே வந்தடைந்தனர்.

தங்களின் வருகையை உடனடியாகவே அரண்மனைக்குத் தெரியப்படுத்தினார் நுஃமான் மக்ரான்.

அவர்களை வரவேற்க தன்னுடைய அவையைக் கூட்டினான் யஜ்தகிர்த் மன்னன்.

எங்கு திரும்பினாலும் அங்கே அழகிய வண்ணமும் வனப்பும் தான் கண்ணுக்குத் தென் பட்டன. பட்டும் பட்டாடையும்

பளபளக்கக் காட்சியளித்தன. பொன்னும் மணியும் மின்னின. பாரசீகத்தின் படாடோப வாழ்வையும் செல்வத்தின் செருக்கையும் எடுத்துக்காட்டும் கண்ணாடியாக இருந்தது மன்னன் அவை அந்த அவையில் கூடியிருந்தவர்களும் அங்கு வரப்போகும் பாலைவன வாசிகளின் கண்களையும் கருத்தையும் மயக்கும் எண்ணத்தில் வெகு பகட்டாக ஆடை, ஆபரண அலங்காரங்களுடன் அமர்ந்திருந்தார்கள். அவர்களுக்கு நடு நாயகனாகப் பெருமிதமுடன் வீற்றிருந்தான் பாரசீகப் பெரு மன்னன்.

ஆனால்—

தம்முடைய தோள்களைச் சாதாரண யமன் போர்வை யொன்று மறைத்திருக்க, கால்களில் முரட்டுத் தோல்களாலான மிதியடிகளை அணிந்து. கையில் ஒரு சாட்டையைப் பிடித்தவராக பாரசீக மன்னனின் பேரவையில் நுழைந்தார் நுஃமான் மக்ரான். அவ்வித எளிய கோலத்திலேயே மற்ற பதின்மூவரும் தங்கள் தலைவரைப் பின் தொடர்ந்து வந்தனர்.

இறை யொருவனைத் தவிர வேறுஎவருக்கும் உடல்வளைத்து, சிரம் பணிந்தறியாத அவர்கள் எவ்வித அச்சமுமில்லாமல், நெஞ்சு நிமிர்த்தியவர்களாக அவை நடுவே வந்து தங்களைச் சூழ்ந்திருந்த ஆடம்பரத்தைக் கண்டும் கிஞ்சித்தும் மலைக்காத மனதினைக் காட்டிய பார்வையுடன் மன்னன் முன் நின்றனர்.

அதைக் கண்டு அவையினர் மட்டுமின்றி அரசனும் பெரும் வியப்புற்றான்—

'என்ன துணிச்சல் இவர்களுக்கு?'

## மூன்று தீமைகள்

பசி, காமம், பேச்சு—இந்த மூன்றையும் ஆட்கொண்டவன் தீமைகள் அனைத்தையும் விட்டு விடுதலை பெற்றவன் என்பது நபி பெருமான் கருத்து.

-இமாம் கஸ்ஸாலீ.

---

அந்த மனோ நிலையில் அவன் வெகு அதிகாரமாகக்கேட்டான்,

"நீவிர் இங்கு எதற்காக வந்தீர்?"

நுஃமான் மக்ரான் தம்முடைய தோழர்களை விட்டும் சற்று முன்னால் நகர்ந்து வந்தார். தெளிவான உள்ளத்தைக் காட்டும் விழிகளால் பாரசீக வேந்தனைப் பார்த்துப் பேசலுற்றார்—

"மன்னவனே! சில காலத்துக்கு முன்பு வரை நாங்கள் அறியாதவர்களாக — காட்டுமிராண்டிகளாக எங்கள் காலத்தைக் கழித்து வந்தோம். பிறகு எங்கள் மீது வல்லவனின் கருணைக் கண் திறந்தது. எங்களிடையே நபி யொருவரைத் தோன்றச் செய்தான். அவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட அந்தத் திருத்தூதர் எங்களுக்கு உண்மையின் வழியைக் காண்பித்தார்கள், நல் வாழ்க்கையின்பால் எங்களை அழைத்தார்கள். எல்லாத் தீமைகளிலுமிருந்து எங்களைப் பாதுகாத்தார்கள். அறியாமை யென்னும் அதல பாதாளத்திலிருந்து, பாவமென்னும் படுகுழியிலிருந்து எங்களை அவர்கள் கை தூக்கிவிட்டார்கள். நேரிய நெறிமுறைகளால் எங்களை அவர்கள் செம்மையாக்கி, சிறந்த ஒழுக்க வழக்கங்கள் கொண்ட மனிதர்களாக மாற்றி

ஞர்கள், தங்களுடைய திருத்தூதை ஏற்பதானால் நாங்கள் அனைவருமே இம்மையில் மட்டுமின்றி மறுமையிலுமே வெற்றி கொண்டவர்கள் ஆவோம் என்று உறுதி யளித்தார்கள். அவர்களின் நல்ல தூதை ஏற்றோம்; நலன் அடைந்தோம். பின்னர் அவர்கள் அந்தத்தூதை அண்டை அயலார்களிடம் எடுத்துச் சொல்ல எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். இஸ்லாமே அவ்வுயரிய தூதாகும். வெகு அற்புதமான நெறியான இது நல்லவை அனைத்தின் ஊற்றுக் கண். நன்மை எது, தீமை எது என்று மிகத் தெளிவாக எடுத்துக் காட்டக்கூடிய சிறந்த மார்க்கம் இதைவிட வேறில்லை...

உள்ளத்தில் சுரந்த நல்லுணர்வை வெளிப்படுத்தும் கண்களால் அவையினரை ஒரு முறை சூழ நோக்கிவிட்டு நுஃமான் மக்ரான் தொடர்ந்து கூறினார்.

"பாரசீக நாட்டுப் பெரு மக்களே! இத்தகைய புனித மார்க்கத்தின்பால் உங்களை நாங்கள் உற்சாகமுடன் அழைக்கின்றோம். இதை நீங்கள் ஏற்பீராகில், இதற்கொப்பாக வேறெதையும் காணமாட்டீர்கள். நாங்களும் உங்களுக்குத் தொல்லை தராது இங்கிருந்து போய் விடுவோம். அவ்வாறு ஏற்கு முன், அல்லாஹ்வின் திருமறையைப் பற்றி உங்களுக்கு உணர்த்தி, அது கூறும் உண்மைகளை உங்களிடம் விட்டுச் செல்வோம். அவ்வழியா வேதமே உங்கள் வாழ்க்கையின் அழகிய வழிகாட்டியாக இருக்கும். எங்களைப் போலவே நீங்களும் உலக இரட்சகரான முஹம்மத் அவர்கள் கொணர்ந்த உண்மை மார்க்கத்தைத் தழுவுவீர்களேயானால், நாமெல்லாரும்

ஒரே சகோதரத்துவத்திலே ஒன்ருக இணைய முடியும், அப்படி இஸ்லாத்தின் தூதை யேற்க விரும்பாவிடில், நீங்கள் எங்களுக்கு 'ஜிஸ்யா' செலுத்தி, எங்கள் பாதுகாப்பின் கீழிருந்துவர வேண்டும். அத்துடன், உங்களுடைய நாட்டில் எவ்வித அநீதியும் தீய செயலும் இனி ஒரு போதும் நிகழாதென்று எங்களுக்கு நீங்கள் வாக்குறுதி தர வேண்டும். இதையும் நீங்கள் மறுப்பதாளுல், நம்மிடையே வாள் முனைதான் தீர்ப்புக் கூற வேண்டும்.''

இன்முகத்துடனே, தமது அன்புள்ளத்தில் சுரந்த இனிமையுடன் நுஃமான் எடுத்துரைத்த மொழிகள் யஜ்த்கிர்தின் உள்ளத்தை இனியதாக்க முடியவில்லை. அங்கே உறைந்த செருக்கின் கடுப்பு மேலும் அதிகமாகிய நிலையில் அவன் வெகு அலட்சியமான தொனியால் அவமதிப்புச் சிந்தக் கூறினுன்:

''என்ன! உங்களுடனு உடன்பாடு? அரபியப் பாலைவனத்தில் ஒட்டக மோட்டிகளாக, உண்ணப் போதிய உணவில்லாமல் பட்டினியில் வாடும் உங்களுடனு ஒப்பந்தம்? நன்ருக இருக்கிறதே!...''

அரசனின் பேச்சை ரசிப்பது போல அவையில் கொல்லென்ற சிரிப்பொலி எழுந்தது.

''ஆட்களைப் பார்த்தால் தெரியவில்லை? இவர்கள் உடையும், நடையும் இவர்களுடன்தானு உடன்பாடு?''—எனப் பல கிண்டல் மொழிகளை அவையினர் அள்ளி வீசினர்.

அந்நிலையில், மன்னவன் மேலும் தொடர்ந்தான்:

''...எங்களுடன் உடன்பாடு என்பதைக் கனவிலும் நினையாதீர்கள். நீங்கள் இதற்கு எவ்வகையிலும் தகுதியானவர்கள்-அல்லர். ஆம், அரபு நாட்டவரைப் போல ஈனத்தனமான இழி நிலையில் வாழும் கேவலமான மக்கள் உலகில் வேறெவரும் இலர். மிக அற்ப சொற்பமான பணத்தைக் கொண்டும் உங்கள் மனங்களை விலைக்கு வாங்கிவிடலாம். எப்போதாவது நீங்கள் குறும்புத்தனம் செய்வதாளுல், குறிப்பிட்ட எமது எல்லை அதிகாரிக்கு எழுதினுல் போதும், ஒரு நொடியில் உங்களையெல்லாம் அடக்கிவிடலாமே! ஆகவே, உங்களுக்கு ஒன்று சொல்வோம்: நாடு பிடிக்க வேண்டுமென்ற வீண் ஆசைகளை விட்டு விடுங்கள். உங்களுக்கு உணவுத் தானியங்களோ வேறெதுவுமோ தேவைப்படுமாளுல், சொல்லுங்கள்! எம்முடைய களஞ்சியங்களிலிருந்து வேண்டுமளவு தரச் செய்வோம். மேலும் உங்கள் நலத்தை முன்னிட்டு நல்லதொரு ஆளுநரையும் நியமிப்போம்!''

முஸ்லிம்களின் சமாதான நோக்கத்தைப் புரிந்துகொள்ளாமல் அவர்களைப் பற்றி அவமானமாகப் பேசி முடித்தான்

உடனே முகீரா ஜுரார ஓ முன் வந்தார். ஆணித்தரமான முறையிலே அவ்வேந்தனுக்குப் பதில் சொல்லலுற்ருர்:

''மன்னவனே! நீர் சொன்னது போல கேவலமான நிலையிலே தான் ஒரு காலத்தில் நாங்கள் இருந்தோம். அல்ல, அதைவிட இன்னும் இழிவான நிலையில் இருந்தோம் என்றுதான் சொல்வேன். அரசர் சொன்னது போல, நாங்கள் சதா பஞ்சத்தில் உழன்றவர்களாக, பட்டினியும் பசியுமாகத்தான் இருந்தோம். செத்த மிருகங்களின் இறைச்சியைப் புசித்து வந்தோம். தோல்களாலான

## நெருங்காதீர்!

நபிகள் திலகம் கூறினார்கள் :

"சில பெண்மணிகளின் கணவர்கள் வெளியூர் சென்று நீண்ட நாட்களாயிருக்கலாம். இத்தகைய பெண்களை நீங்கள் நெருங்காதீர்கள். மனிதனின் உடலில் உதிரம் ஓடும் பகுதிகளிலெல்லாம் துர் எண்ணம் வியாபித்து ஓடுகிறது."

"தங்களுக்குமா இப்படி?" என்று நண்பர்கள் திரு நபியவர்களைக் கேட்டார்கள்.

"ஆம், சந்தேகமின்றி. ஆனால் விபரீதம் ஏற்படாதவாறு இறைவன் என்னைக் காப்பாற்றி விட்டான்."

மூலம்: இமாம் கஸ்ஸாலி

தமிழ்: எஸ். அப்துல் வஹ்ஹாப் (பாகவி)

---

உடைகளை அணிந்திருந்தோம். வெறும் கட்டாந் தரையிலே படுத்துறங்கினோம். ஆனால்... அல்லாஹ்வினால் தேர்ந்தனுப்பப் பட்ட திருத்தூதர் எங்களிடையே தோன்றியதிலிருந்து நாங்கள் முற்றிலும் மாறிவிட்டோம். அவர்களுடைய வழிகாட்டுதல் எங்களைப் பற்றுக் குறையிலிருந்து விடுவித்துவிட்டது. அவர்களுடைய அற்புதமான போதனைகளும் சிறந்த முன் மாதிரிகளும் எங்களை உலகின் தலைவர்களாக்கிவிட்டன. ஏன், உம்மைப்போன்ற பெருமைமிக்க அரசர்களும் இப்போது எமக்கு அஞ்சுகின்றனர்..."

யஜ்த்கிர்த் அரசனின் முகத்தில் வெம்மை யேறியது. உள்ளதைச் சொன்னால் உடம்பெல்லாம் எரியும் என்பார்கள் அல்லவா? அதற்காக, உள்ளதை மறைத்துப் பேசவோ அல்லது அதை வெளிப்படையாக எடுத்துரைக்காமல் இருக்கவோ முகீரா விரும்பவில்லை. அச்சமில்லாமல் மேலும் கூறினார்:

"...கொற்றவனே! இப்படியே நான் பேசிக்கொண்டு போவதால் பயன் ஒன்றுமில்லை. அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்கள் மீது விசுவாசம் கொண்டு அவர்களுடைய போதனைகளை ஏற்று நடக்க நீர் இசையும்! அல்லது, எங்களுக்கு காப்புவரி செலுத்திவர இணங்கும்! இவ்விரண்டில் ஒன்றை ஏற்க நீர் மறுப்பீரானால், நம்மிடையே வாளானது தீர்ப்பளிக்கும் வரை பொறுத்திரும். உங்கள் நாட்டின் மீது தொடுத்திருக்கும் போரை நாங்கள் நிறுத்திவிடப் போவதில்லை."

முகீராவின் பேச்சைக் கேட்ட யஜ்த்கிர்த் மன்னனுக்கு இருக்கை கொள்ளவில்லை. நெருப்பின் மீது அமர்ந்திருந்ததைப் போலிருந்தது. ஆத்திரத்திலே துள்ளியெழுந்து மீண்டும் சிம்மாதனத்தில் விழுந்தான். சினம் பொங்கக் கூறினான்:

"யஜ்தான் மீது ஆணையாக பிற நாட்டுத் தூதுவர்களின் இரத்தத்தைச் சிந்தவைப்பது எங்கள் அரசின் மரபுக்குப் புறம்பானது என்றில்லாவிட்டால், உம்மை என்ன செய்திருப்போம் தெரியுமா? இதுவரை உம்முடைய சிரம் உமதுடம்பில் இராது! எம் வாளால் அதைக் கொய்திருப்போம். என்னவோ பிழைத்துக்கொண்டீர்! வாள் முனையிலா தீர்வு காண வேண்டுமென்று கூறுகிறீர்? அதற்கு

நாம் அஞ்சவில்லை. ஆனால் உமக்கும் உம்முடைய இனத்தவருக்கும் தக்க பாடம் கற்பிக்க எம்முடைய தளபதி ருஸ்தூம் புறப்பட்டு வருவார். உங்களையெல்லாம் அவர் கதிஸிய்யா களத்திலே குழி தோண்டிப் புதைப்பார்!''

வார்த்தைகளைப் பட படவென்று பொரிந்து தள்ளினான் பாரசீக மன்னன். அவன் கண்களில் கோபக் கனல் இன்னும் தெறித்துக் கொண்டிருந்தது. வலது கரத்தை விறைப்புடன் ஆட்டியவனாகக் கூவினான்:

''இவர்களைப்பிடித்து வெளியே தள்ளுங்கள்! எமது கண் முன்னிருந்து விரட்டுங்கள்!''

அவன் கட்டளையை உடனடியாக நிறைவேற்ற ஊழியர் விரைந்தனர். அவை நடுவே நின்றுகொண்டிருந்த தூதுவர்களைப் பிடித்துத் தள்ளக் கரங்களை நீட்டியவர்களாக நெருங்கி வந்தனர்.

''பொறுங்கள்! அவர்கள் நிற்கட்டும்!''—ஏதோ நினைத்தவனாகத் தன் உத்திரவை மாற்றினான் யஜ்த்கிர்த்.

அப்படியே விலகி நின்றனர் சேவகர்கள்.

கொஞ்சமும் கலவரம் அடையாமல் நின்றுகொண்டிருந்த தூதுவர்களை நோக்கிப் பாரசீக மன்னன் சொன்னான்:

''இவ்வளவு தூரம் வந்துவிட்ட உங்களை வெறுங் கையுடன் அனுப்புவது முறையல்ல. உங்களுக்கேற்ற சன்மானம், வெகுமதி தர விரும்புகிறோம். அதை உங்கள் முகாமுக்குக் கொண்டு செல்ல தகுதியானவர் வேண்டுமே! ஆமாம்...உங்களிலேயே மிக உயர் குடும்பத்தைச் சேர்ந்தவர் யார்?''

மன்னவனின் குரலில் தொனித்த கிண்டலையும் குறும்புத்தனத்தையும் முஸ்லிம் தூதுவர்கள் உணர்ந்துகொண்டனர். என்ருலும், அவர்கள் அதை வெளிக்காட்டிக்கொள்ளவில்லை.



"இதோ நான் இருக்கிறேன். முஸ்லிம்களின் இப்போதைய கலீபா அவர்களின் மைந்தன் ஆவேன். உம்முடைய வெகுமதியை நான் எடுத்துச் செல்வேன்" என்ருர் ஆஸிம், அமைதியாக. வாட்டசாட்டமாக வளர்ந்திருந்த அவர் முகத்தில் நல்லறிவின் ஒளி இலங்கியது.

"யார் அங்கே? ஒரு கூடை மண் கொண்டு வாருங்கள்! கேவலமான அரபிய அடிமைகளுக்கு ஏற்ற சன்மானம் அதுதான்."—அருவருப்பை உமிழ்ந்த வனுக யஜ்த்கிர்த் அரசன் கட்டளையிட்டான்.

அங்கிருந்த சேவகரில் சிலர் மன்னனின் கட்டளையை நிறைவேற்றிவர ஓடோடிச் சென்றனர். ஒரு கூடை நிரம்ப மண் கொண்டு வந்தனர்.

"அதை இம்மனிதர் தலையில் வையுங்கள்!"—ஆஸிமை நோக்கி மிக அலட்சியமாகச் சுட்டிக் காட்டினுன் பாரசீக வேந்தன்.

வேண்டுமென்றே அவன் முஸ்லிம்களை அவமானப்படுத்த முனைந்ததைக் கண்ட தூதுவர்கள் ஒரு சிறிதும் நிலை தடுமாறவில்லை. அதைப்பற்றி அவர்கள் வருத்தப்பட்டுக்கொள்ளவுமில்லை. அகந்தையால் மதியிழந்த மன்னனிடமிருந்து அதைத் தவிர வேறெதையும் எதிர்பார்க்க முடியுமா?

"நல்ல பரிசு!"—மனதில் எவ்விதக் கடுப்புமில்லாமல் மெல்லக் கூறினுர் ஆஸிம். மலர்ந்த முகத்துடன், தம் தலைமீது வைக்கப்பட்ட கூடை கீழே விழுந்துவிடாமல் தம்து வலது கரத்தால் அதைப் பிடித்துக்கொண்டார்.

"மன்னவனே! நாங்கள் வருகிறோம்" என்றவராக ஆஸிம் அவையிலிருந்து வெளியேறினுர். அவருடைய தோழர்கள் அவரைப் பின் தொடர்ந்து சென்றனர்.

"இக் கூடை மண் ஏதோ ஒரு நன்மையின் அறிகுறி என்றே எனக்குப்படுகிறது. இதை நம்ம வரிடம் கொண்டுசெல்வோம்."—ஏதோ இனம் புரியாத மகிழ்ச்சி உள்ளத்தில் தவழ, கூடைச் சுமையுடன் தமது பரியின் மீதேறி அமர்ந்தார். அவர் தமது நெஞ்சத்தில் துள்ளிய உவகையைப் போலவே தம்முடைய புரவியையும் துள்ளி ஓடச் செய்தார்.

கூடிய விரைவிலே ஆஸிமும் அவருடைய தோழர்களும் கதிஸிய்யாவில் முஸ்லிம்சேனை பாளையமிறங்கி இருந்த இடம் வந்து சேர்ந்தனர்.

குதிரையை விட்டு இறங்கியதும், நேரே தளபதியாரின் விடுதி நோக்கி ஓடினார் உமரின் புதல்வர்.

தலையிலே மண் சுமந்தவராகத் தமது முன் வந்து நின்றவரை ஒன்றும் புரியாமல் வியப்புடன் பார்த்தார் ஸஅத்.

"தங்களுக்கு என் பாராட்டுகள்! இதோ, இதை உவப்புடன் ஏற்றுக்கொள்ளுங்கள். பாரசிக மன்னன் தந்த பரிசு! தம்முடைய பேரரசின் மண்ணில் கொஞ்சம் அவர் நமக்குச் சன்மானமாகத் தந்திருக்கிறார். அல்ல, தம்முடைய கையாலேயே தமது மண்ணை அவர் நமக்குத் தந்து விட்டார்!"—மனம் பூரித்தவராகக் கூறினார் ஆஸிம்.

ஸஅதின் முகத்தில் தோன்றிய வியப்பு மறைந்துவிட்டது. உண்மையைப் புரிந்துகொண்ட நிலையில் ஆஸிமைப் பார்த்து மென்முறுவலித்தவராகச் சொன்னார்:

"உம்முடைய வாக்கு மெய்யாகட்டும்! இறைவன் போதுமானவன்."

*உலகத்தை உய்விக்க வந்த உத்தம நபியின் குழந்தைப் பருவத்தை வருணிக்கும் போது மெய் சிலிர்க்கிறது! (சென்ற இதழின் தொடர்ச்சி)*

# வளம் தந்த வளர்ப்பு!



"ஷெய்க்"

அவ் வளமான சூழ்நிலையில், சின்னஞ் சிறு பருவத்திலேயே மற்ற சிறுவர்களுடன் தினமும் ஆடுமேய்க்கச் சென்று வந்தனர் முஹம்மத். ஒரு சில வேளைகளில் அவர் அங்குள்ள குன்றுகளின் மீதும், குறுகிய கற்பாறைகளின் உச்சியிலும் ஏறிச் செல்வதுண்டு. இருந்தாலும், அவர் துஷ்டத்தனமான 'பதவீ' சிறுவர்களுடன் அவ்வளவாக நெருங்கிப் பழகவில்லை. அவர்களிடமிருந்து தனியே பிரிந்து சென்று, மறைவான இடங்களில், புறவுலகை மறந்து, தமது சிந்தனையை உள்ளே செலுத்தி நிறுத்தியவராக, வெகு நேரம் அமர்ந்து விடுவார் அப்துல்லாஹ்வின் மைந்தர். தம்மைப் பற்றி, தம்முடைய குறைபாடுகளைப் பற்றியெல்லாம் உண்ணி, ஆழ எண்ணிப் பார்த்து வந்தார். அவ்வாறு தம்மீது அன்பும் அபிமானமும் காட்டிவந்த செவிலித் தாய் ஹலீமாவின் அருகாமையில் இல்லாத நிலையில், தன்னுராய்வு செய்யும் இயல்பு அவரிடம் பலமாக வளர்ந்து வந்தது.

அவருக்கு நான்கு வயது நடந்துகொண்டிருந்தபோது ஒரு நாள் காலை சிறுவர் முஹம்மதும், அவருடைய பால்குடி சகோதரர் அப்துல்லாஹ்வும் தங்களுக்குரிய ஆடுகளை ஓட்டிக் கொண்டு, கூடாரங்களுக்கு அப்பாலிருந்த மேய்ச்சல் தரைக்குச் சென்றூர்கள்.

நடுப்பகல் இருக்கும். உடல் பதறியவராக கூடாரத்திற்கு ஓடோடி வந்தார் அப்துல்லாஹ். ஒரு வித அச்சத்தால் குரல் குளறக்கூவினுர்:

"அம்மா! அப்பா! சீக்கிரம் வாருங்கள்! வழக்கம் போல முஹம்மத் இன்றும் என்னைவிட்டுத் தனியே சென்றுர். வெகு நேரமாகியும் திரும்பி வரவில்லை. பிறகு அவரைத் தேடிப் போனேன். என்ன நேர்ந்ததோ, உட்கார்ந்த நிலையில் ஆடாமல் அசையாமல் ஒரு மாதிரியாக இருக்கிறுர். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. வாருங்கள், சட்டென வாருங்கள்!"

அதைக்கேட்ட ஹலீமாவும் அவர் கணவரும் மதி மருண்டு,

என்னவோ, ஏதோ'வெனத் தங்கள் சிறுவன் காட்டிய திசையில் குடல் தெறிக்க ஓடினார்கள்.

சற்றைப் பொழுதில் அவர்கள் அங்கே ஒரு குன்றின் மீது பாலகர் முஹம்மத் தன்னந் தனியே குந்தி யிருக்கக் கண்டனர். பரபரப்புடன் அவரைப் பார்த்தனர். ஆனால் சிறுவரோ எவ்விதக் கலவரமுமின்றி, மிக அமைதியாகத்தான் இருந்தார். என்றாலும், அவரது கமலவதனம் இனம் புரிய முடியாததொரு மாறுதலுடன் தோற்றமளித்தது.

'ஏன் அவர் முகம் இப்படி வெளிறி இருக்கிறது?'—உள்ளம் பதை பதைத்தவர்களாக முஹம்மதின் அருகில் சென்றனர், அவரது வளர்ப்புப் பெற்றோர்கள். அச் சிறுவரை ஆதூரமுடன் அள்ளியணைத்தவராக, அவரிடம் மிகுந்த ஆதங்கமுடன் ஹலீமா கேட்டார்:

''என்னருமைக் குழந்தாய்! உடம்புக்கு என்ன? உமக்கேது நேர்ந்தது?''

அல்-ஹாரிதும் அவ்வாறே வினவினார்,

அவ்விருவரையும் நோக்கி முஹம்மத் மிக அமைதியாக மறுமொழி கூறினார்:

''அதோ மேய்ந்துகொண்டிருக்கும் நம் ஆட்டு மந்தையை நான் கவனமுடன் பார்த்துக் கொண்டிருந்தேன். அவ் வேளை தொலைவிலிருந்து இரண்டு உருவங்கள் என்னை நோக்கி வரக் கண்டேன். முதலில் அவை இரு பெரும் பறவைகள் போலவே என் கண்ணுக்குத் தோன்றின. ஆனால் அருகில் நெருங்கி வர வர, அவை யிரண்டும் மனித உருவங்களாகத் தெரிந்தன, அவர்களிருவரும் தூய வெண்ணுடை தரித்திருந்தனர். அவர்களில் ஒருவர் பனி நிரம்பிய பெரிய பொற் கிண்ணம் ஒன்றை ஏந்தி யிருந்தார். அவர்களின் புதுமையான தோற்றம் கண்டு, நான் திகில் கொண்டு நின்றேன். அப்போது அவர்கள் என்னைத் திடீரென மல்லாத்திக் கீழே சாய்த்தனர். மறு கணம் என் மார்பைக் கிழித்து இதயத்தை வெளியே எடுத்தனர். பின்னர் அதைப் பிளந்து, அதிலிருந்து ஒரு கருப்பு ரத்தக் கட்டியை எடுத்துத் தூர எறிந்தனர். அதன் பிறகு அவர்கள் அந்த இதயத்தையும் மார்பின் உட்புறத்தையும் பனியால் நன்றாகக் கழுவினர். அடுத்து, அவர்கள் என் இதயத்தை முன் போலப் பொருத்தினர். உடனே என் நெஞ்சக் கூட்டை மீண்டும் மூடினர். அப்பால் கண்ணிமைப் பொழுதில் மறைந்து சென்றனர்.''

உண்மையில், அந்நிகழ்ச்சியானது சிறுவர் முஹம்மத் தமது விழிப்பு நிலையில் கண்ட ஒரு உவமதரிசனம் தான். அவருடைய இதயத்தை எல்லாவிதமான அசுத்தங்களை விட்டும் தூய்மையாகிவிட்டதாக—மனித இயற்கையால் உண்டான கெட்ட குணங்களை நீக்கி, தூய உலகிலிருந்து ஒலிக்கும் இறையருளை ஏற்றுக்கொள்ள அவருள்ளம் சித்தமாகிவிட்டதாக அவருக்குணர்த்திய ஒரு தோற்றமே அது. அத் தோற்றம் அப் புனிதச் சிறுரின் நெஞ்சகத்தில் ஒளியேற்றி அதை விசாலமடையச் செய்வதாக இருந்தது.

ஆனால் ஹலீமாவும் அவர் கணவர் அல்-ஹாரிதுமோ கல்வியறிவில்லாத நாட்டுப்புறவாசிகள். அந்த உவமதரிசனத் தோற்றத்தின் உண்மைத் தன்மையை அவர்கள் எவ்விதம் அறியக்கூடும்? மக்கத்துப் பாலகர் கூறிய விருத்தாந்தத்தைக்

கேட்டு அவர்கள் வெறும் அச்சமும் அதிர்ச்சியும் கொண்டனர்.

பின்னர், அவ்விருவரும் தனியாக இருந்தபோது, அல்-ஹாரித் தமது மனைவியிடம் சொன்னார்:

''ஏதோ ஒருவித நோய் குழந்தையைப் பீடித்திருக்கிறது. இதன் விளைவு அதிகமாகுமுன் அவரை நாம் அவரது உற்றாரிடம் கொண்டு போய் ஒப்படைத்துவிடவேண்டும். இனியும் நாம் அவரை நம்முடன் வைத்திருப்பது பத்திரமானதல்ல.''

ஹலீமாவுக்கும் அதுவே உசிதமாகப்பட்டது. அவர் மீது தான் முஹம்மத் எப்படி அன்பு வலை பின்னியிருந்தார்! ஒரு சில ஆண்டுகளிலே அந்த வளர்ப்புத் தாயின் இதயத்தில் அவர் எத்துணை உறுதியான பாசமுடிச்சுகளைப் போட்டுவிட்டார்! இருந்தாலும், அவர் நலனை நாடி, அவரைக் காலந் தாழ்த்தாமல் அவரது அன்னையார் ஆமினாவிடம் சேர்ப்பித்துவிட முடிவு செய்தார், அபூதுலையபின் மகளார்.

ஆக, அவரும் அவர் கணவரும், முஹம்மதை அழைத்துக் கொண்டு, மீண்டும் வடக்கே பயணமாகினர்.

மக்கா நகரில் நுழையும்போது சிறுவரைத் தம் மருகில் நடத்தாட்டிச் சென்றார் ஹலீமா. ஓரிடத்தில் மக்கள் திரளுக்குள்

---

# எலுமிச்சம் பழம்....

குளிர்ச்சியானது. தாகத்தை தணிக்கும். 'சி' வைட்டமின் அதிகமுடையது. வாத நோயையும் பித்த நோயையும் கண்டிக்கும். நல்ல ஜீரண சக்தியை உண்டாக்கும். சகலவிதமான வயிற்றுக் கோளாறுகளுக்கும் சிறந்த மருந்து. நமது சமையலில் புளிக்கு பதிலாக எலுமிச்சம் பழத்தை உபயோகித்தால் எவ்வித வயிற்றுக் கோளாறும் நம்மை அணுகாது. எலுமிச்சம் பழத்தில் உள்ள புளிப்புச் சத்து சீரணத்திற்கு மிகவும் அனுகூலமானது. ஒரு எலுமிச்சம் பழச் சாறுடு நாலு பங்கு நீரைக்கலந்து அதனாலே வாயை அடிக்கடி கொப்பளித்து வந்தால் வாய், தொண்டை சம்பந்தமான எந்த நோயும் வராது. வாயில் துர்நாற்றமும் நீங்கிவிடும்.

எலுமிச்சம் பழத் தோலினாலும், நாரினாலும் நாள் தோறும் முகத்தைத் தேய்த்து வந்தால் முகம் ஒளி பெறும்.

எலுமிச்சம் பழத்தில் ஆறில் ஒரு பாகம் வெட்டி எடுத்து அத்துண்டைக்கொண்டு பல் தேய்க்கலாம். இதனால் பற்களிலும், ஈறுகளிலும் உள்ள நச்சுக் கிருமிகள் அழிந்துவிடும். —ஆதாரம்: "வான்மதி."

சிக்குண்ட பாலகர் முஹம்மத் அப்பெண்மணியாரின் கவனத்தி லிருந்து தவறி, காணாமல் போய் விட்டார். குலைபதறியவராக ஹலீமா எங்கெங்கு தேடியும் குழந்தை தென்படவே இல்லை. அளவு கடந்த மனச் சஞ்சலத் துடன் அவர் அப்துல் முத்தலி பிடம் சென்றார். பெருத்த அங்க லாய்ப்புடன் தெரிவித்தார்:

"இன்று மாலை முஹம்மதை இங்கு அழைத்து வந்தேன். நகரின்மேல் பகுதியில் ஒரே மனிதர் கூட்டம். அந்த நெருக் கடியில் அவர் திடீரெனக் காணு மல் போய்விட்டார். என்ன தேடியும் அவரைக் கண்டு பிடிக்க முடியவில்லை. என் அரும் சிறுவர் இப்போது எங்கிருக்கி றாரோ?"

அச்செய்தியறிய, மிகவிசன முற்றார் பெரியவர் அப்துல் முத்த லிபு. கொஞ்சமும் சுணங்காது தம்முடைய வேலையாட்களை நாலாதிக்கிலும் அனுப்பினார். அப் படியே அவர் கஅபா சென்று, முஹம்மதைத் தம்மிடம் சேர்ப் பிக்கப் பிரார்த்தித்து விட்டு, குதிரை மீதேறித் தாமும் தம தருமைப் பேரரைத் தேடப் புறப்பட்டு விட்டார்.

அவர் அனுப்பிய வேலையாட் களில் ஒருவர் திஹாமா என்னு மிடம் வந்த போது, ஒரு சிறு வர் அங்கிருந்த செடிகொடிகளை வளைத்து ஒடித்து விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டார். அச்சிறுவரை அணுகி "பிள் ளாய்! நீயார்?"என்று கேட்டார்.

"அப்துல் முத்தலிபின் புதல் வரான அப்துல்லாஹ்வின் மைந் தன் முஹம்மத்!" என்ற பதில் 'கணீர்' என வந்தது.

பின்னர் அவ்வழியாக வந்த வராகா நவ்ஃபலும் அந்த ஹாஷிம் குலச் சிறுவரை அடை யாளம் கண்டு கொண்டார்.

அவ்விருவரும் அப்பாலகரை அவருடைய பாட்டனாரிடம் கொண்டு சேர்த்தனர். பாலை வனத்திடையே நீரோடையைக் கண்டது போலானார் அப்துல் முத்தலிப். மெத்த உவப்புடன் பேரரைத் தமது தோளில் ஏற்றி கஅபாவை இடம் வந்தார். இறந்து போன தமதன்பு மைந்தருடைய அருமைப் புதல் வரின் நலத்திற்காக இறை வனைக் கனிவுடன் வேண்டினார். பின்னர் அவரைத் தம் குதிரை யின் கலனையில் அமர்த்தி பத்திர மாகத் தமது மருமகளாரிடம் கொண்டு வந்து ஒப்படைத்தார்.

சிறுவர் முஹம்மதைக்காணவே அவரைப்பெற்ற அன்னையார், இழந்த தனத்தை மீண்டும் பெற்றதைவிட அதிக மகிழ் வுற்றார். அவரிடமிருந்து நீண்ட தொரு ஆறுதல் பெருமூச்சு வெளிப்பட்டது. தமது உதரம் கண்ட செல்வரை அப்படியே வாரி அரவணைத்தவராக அப் பாலகருக்குத் தம் அகங் குளிர பல முத்தங்கள் ஈந்தார்.

அவரைப் போலவே, தம் வளர்ப்பு மகனார் காணாமல்போன திலிருந்து பெரிதும் அல்லல் பட்டுக் கொண்டிருந்த ஹலீமா வும் இப்போது, கலவரம் அகல, மன நிம்மதி அடைந்தார்.

அவரிடம் ஆமினா அம்மையார் கேட்டனர்: "முன்னர் நீர் எம் முஹம்மதை உம்முடன் வைத் திருக்க எவ்வளவு அக்கறைப் பட்டீர். இப்போது ஏன் அவரை இத்துணை அவசரமாக என்னி டம் திரும்பக் கொண்டுவர வேண்டும்?"

"இதுவரை மகன் நலமாக இருந்தார். நானும் என் கட மையை நல்லவிதமாகச் செய்

தேன். ஆனால் அவருக்குப்பிணி வரலாம் என்ற அச்சம் ஏற்பட, சுணங்காது அவரை இங்கு அழைத்து வந்தேன்"—ஹலீமா சூசகமாகவே பதிலிறுத்தார்.

"அவ்வாறு அச்சம் ஏற்பட வேண்டிய காரணம்?" என்று அடுத்து வினவினார் ஆமினா அம்மையார். தம் தனயரின் செவிலித்தாய் அக்காரணத்தைத் திறந்து சொல்லும் வரை அவர் விடுவதாக இல்லை. அதன்பேரில் ஹலீமாவும் அன்றொரு நாள் பாதியாவின் குன்றின்புறமாக நடந்தவற்றையெல்லாம் விளக்கமாக எடுத்துரைத்தார்.

"என்ன, என்னரும் செல்வர் மீது ஏதும் ஆவி பிடித்திருப்பதாக நம்புகிறீரோ?" எனக் கேட்டனர், ஆமினா.

"ஆம்" என்றார் ஹலீமா.

"நிச்சயமாகச் சொல்வேன். என் மகனார் மீது எந்த ஆவியும் பிடிக்கவில்லை. அவருக்குச் சிறந்த வருங்காலம் உண்டு. அவரை நான் சூல் கொண்டிருந்த போது, என் உதரத்திலிருந்த ஒரு பேரொளி கிளம்பிச்சென்று ஷாமில் உள்ள புஷ்ராவின் அரண்மனையைப் பிரகாசிக்கச் செய்தது. அவரைப் பெறும் போது நான் அவ்வளவு ஒன்றும் அதிகமான வேதனை அனுபவிக்கவில்லை அவரை என்னிடம் விட்டு, நீர் நிம்மதியாகச் செல்லலாம்" என்று ஒரு தாயின் பெருமிதத்துடன் சொன்னார் ஆமினா.

'அவருக்குச் சிறந்த வருங்காலம் உண்டு' அச்சொற்கள் ஹலீமா நெஞ்சத்தில் உருள, பாலகர் முஹம்மதை அவ்வளவு அவசரமாக அவர் மாதாவிடம் கொணடுவரத் தம்மை உந்திய மற்றொரு சம்பவம் அவா மனக் கண் முன் தோன்றியது.

## மாட்டு எலும்பிலே கடிதம்!

500 ஆண்டுகளுக்கு முன்பு மாட்டின் தோள்பட்டை எலும்பிலே இந்திய மையினால் எழுதப்பெற்ற அசாதாரணக் கடிதம் ஒன்றை காஸக் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள். அதில் காணப்படும் எழுத்துக்கள், இனம் காண இயலாத சவ அடக்க மந்திரம் என்றுகூட சொல்கிறார்கள்.

இந்தக் கடிதம் 15 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. தெற்கு காஸக்ஸ்தானிலுள்ள அஸ்பார் கோட்டையை அகழ்ந்து எடுக்கையில், இக் கடிதம், கண்டு எடுக்கப் பட்டது. கடிதம், துருக்கி மொழியில் அரபு எழுத்துக்களில் அமைந்து இருக்கிறது. இக்கோட்டை 14ஆம் நூற்றாண்டில் மங்கோலிய ராணுவத் தலைவன் தார்மலேனால் கட்டப்பட்டது. ஐரோப்பாவிலிருந்து மத்திய ஆசியாவின் வழியாக இந்தியாவுக்குச் செல்லும் ஒட்டகப் பாதையில் இக்கோட்டை 16ஆம் நூற்றாண்டின் துவக்கம் வரை இருந்தது.

ஆதாரம்: பத்திரிகைச் செய்தி.

ஆமினாவின் அருமை மகனாரை வளர்த்து முடித்த பின்னர், ஹலீமா அவரை பாதியாவிலி

ருந்து மக்கா கொண்டு வந்த போது, வழியில் அப்பாலகரை ஒரு சில ஹபஷி கிறிஸ்துவர்கள் கண்டனர். அவரைப் பற்றிப் பல கேள்விகளை அபூ துயையின் புதல்வியாரிடம் கேட்டனர். பின்னர் அம்மாதிடம் கூறினர்.




"இந்த சிறுவரை எங்களுடன் அழைத்துச்செல்லவிடும். எங்கள் நாட்டை ஆளும் மன்னரிடம் இவரை எடுத்துச் செல்ல விரும்புகிறோம். இவருக்குப் பெரிய வருங்காலம் உண்டு."

அந்த கிறிஸ்துவர்களிடமிருந்து குழந்தையைப் பிரிக்க பெரும் பாடாகிவிட்டது ஹலீமாவுக்கு.

'அவருக்குப் பெரிய வருங்காலம் உண்டு'— அந் நினைவு புதியதொரு பொருளுடன் மீண்டும் ஹலீமாவின் நெஞ்சத்தினூடே ஓடத் துவங்கியது.

அதை உறுதிப்படுத்துவதாகத் தானே இருந்தது, ஆமினுவின் சகோதரர் கூறியது? முஹம்மத் பிறந்த ஏழாம் நாள் வைபவத்தின் போது பெரிய சோதிடரான அவர், தம் தங்கை மகனுரின் ஜனன நேரத்தில் கிரகங்கள் நின்ற நிலையைக் கணித்துவிட்டு, முன்னறிவிப்புச் செய்தார்:

"இவர் ஒரு பெரிய மதத் தலைவராகவும் மன்னாதி மன்னராகவும், அதிகாரத்தில் மிக்க செல்வாக்குள்ளவராகவும் பின்னால் ஆய்விடுதல் கூடும்."

அதைப்பற்றியெல்லாம் ஹலீமாவுக்கு எங்கே தெரியும்? ஆனால் அவர், ஆமினு அம்மையார் கூறியதைக் கேட்டு, சிறுவர் முஹம்மதைப் பற்றித் தாம் கொண்டிருந்த அச்சம் நீங்கியவரானர். அவ்வருமைச் செல்வரை வளர்த்ததற்காகத் தமக்கு கிடைத்த ஊதியத்தை விட ஆயிரம் பொற்காசுகளுக்கு மேலாக, அவ்விறையருள் பாலகருக்குப் பெரிய, சிறந்த வருங்காலம் உண்டு என்ற வாக்கைக் கருதினர். அவ்வாக்குப் பொன்னுகட்டும் என்று மனதார வேண்டியவராக அவர் தம் கணவர் அல்—ஹாரிதுடன், பாதியா திரும்பினர். ★




## 3. உதவிப் படை

புற அழகில் நிகரற்றவளே எனினும் அகத்தின் அழகிலே குறைந்தவளான இளவரசி புளோரிந்தாவின் மீது இளவரசன் உமருக்குத் தோன்றியிருந்த ஆசை சியூட்டா கோட்டையை விட்டு அவன் புறப்பட்டு வந்த பிறகு சிறிது சிறிதாகக் குறைந்து வந்தது. அதன் பின் டாஞ்சியர் கோட்டையின் தலைவனாக நியமனம் பெற்று அங்கு சென்று பதவி ஏற்றதிலிருந்தே அவள் அவனுடைய உள்ளத் திரையிலிருந்து மெல்ல மெல்ல மறைந்து கொண்டிருந்தாள். எப்போதாவது அவளுடைய நினைவு அவனுக்கு வரும் போது அவளுக்காக அனுதாபம் நிறைந்த பெருமூச்சு ஒன்று அவனிடமிருந்து வெளிப்படும். அவ்வளவுதான். காரணம் இன்னதென்று அவனுக்குத் தெரியாவிட்டாலும் அனுதாபத்துக்குரிய ஓர் இளம் பெண்ணாகவே அவள் எப்போதும் அவனுக்குத் தோன்றிக்கொண்டிருந்தாள்.

ஆகையினாலேதான் அவன் டாஞ்சியருக்கு அனுப்பப் பட்டது அசாதாரணமாகப் படவில்லை அவனுக்கு. சேனாதிபதி மூஸாவும், இளவரசன் ஈஸாவும் சேர்ந்து வகுத்த திட்டம் பற்றி எதுவுமே அறியாத உமர், தன்னுடைய நியமனத்தைத் தனக்கு அளிக்கப்பட்ட ஒரு கவுரவமாகவே கருதினான். கலீபாவின் குடும்பத்தைச் சேர்ந்த உமய்யா வம்ச இளவரசர்களுள் ஒருவன் என்பதால் அவன் பெற்றிருந்த பயிற்சிகள் பலவும் அவனை அப் பதவிக்கு உண்மையிலேயே தகுதியுடையவனாக்கியிருந்தன என்பதில் ஐயமில்லை. எனினும் டாஞ்சியர் கோட்டையின் தலைவனாகப் பதவியை ஏற்றுக்கொண்ட பிறகு

ஒரு சில நாட்களுக்குள்ளாகவே அந்த வாழ்க்கை தனக்குப் பிடிக்கவில்லை என்று அவன் உணரத் தொடங்கினன்.

அவனும், அவனுக்கு முன்பாக அவனுடைய தமயன் ஈஸாவும் புனிதப் போர்களில் பங்குபெறும் நோக்கத்துடனேயே கலீபாவின் அனுமதி பெற்று திமிஷ்கு நகரிலிருந்து வட ஆப்பிரிக்காவுக்கு வந்தவர்கள் பல மாதங்களாக அவர்களனைவரும் எதிர்பார்த்திருந்த படையெடுப்பு நிகழவிருந்த நேரத்தில் சேனதிபதி அவனுக்கு வேறு ஒரு பதவி கொடுத்தபோது அவருடைய கட்டளைக்கு மறுப்புக் கூற அவனல் இயலவில்லை.

டாஞ்சியர் கோட்டையின் தலைவன் என்ற முறையில் கடினமான பொறுப்புகள் பலவற்றை அவன் நிறைவேற்றி வந்த போதிலும் போர்க்களம் செல்லும் ஆசை தோன்றும் போதெல்லாம அவனுடைய அப்போதைய பதவி, சோம்பல் வாழ்க்கையாகவே அவனுக்குத் தோன்றியது.

எனவே, மேலும் சில நாட்கள் சிந்தித்த பிறகு ஒரு முடிவுக்கு வந்தவனக சேனதிபதி மூஸாவுக்குக் கடிதம் ஒன்று வரைந்தனுப்பினன். போரில் கலந்து கொள்ள அவனுக்கிருந்த அடக்க இயலாத ஆவலை வெளியிட்டு விரைவிலேயே அதற்குரிய சந்தர்ப்பத்தைத் தனக்கு அளிக்குமாறு வெகு உருக்கமாக அக் கடிதத்தில் அவரை வேண்டிக் கொண்டிருந்தான் அவன்.

மேற்கொண்டு படை அனுப்புமாறு ஸ்பெயினில் இருந்து ஜூலியன் பிரபு எழுதிய நிருபம் கிடைத்தது முதல் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச்செய்து கொண்டிருந்தார் மூஸா. மேலும் பதினயிரம் வீரர்கள் வேண்டுமென ஜூலியன் கேட்டிருந்தாலும், ஐயாயிரம் வீரர்களை மட்டும்அப்போதைக்கு அனுப்பி வைத்தால் போதும் என்று அவர் கருதினர்.

ஆனல் ஜூலியனின் இரண்டாவது வேண்டுகோளைப் பற்றித் தான் எந்த முடிவுக்கும் வர முடியாமல் மூஸா குழம்பிக் கொண்டிருந்தார். தன் மகளின் காதல் நோயைப் பற்றிக் குறிப்பிட்டு அதற்குப் பரிகாரமாக இளவரசன் உமரை அனுப்பி வைக்கக் கோரிய சியூட்டா சிற்றரசனின் வெட்கங்கெட்ட செயல் விசித்திரமாகப் பட்டது சேனதிபதிக்கு. மேலை நாட்டுக் கிறித்தவர்களின் இயல்பே அப்படிப்பட்டதுதான் போலும் என்று எண்ணினர் அவர்.

இந்த சந்தர்ப்பத்தில்தான் உமரின் கடிதமும் அவருக்கு வந்து சேர்ந்தது. படித்துப் பார்த்த மூஸாவின் திரையோடிய வதனத்தில் புன்னகை அரும்பியது.

புளோரிந்தா உமரின் உள்ளத்தில் ஏற்படுத்திய சலனம் ஆழமானதல்ல என்று அவர் தெரிந்து வைத்திருந்தார். எனினும், மேலும் மேலும் நெருங்கிப் பழகுவதன் மூலம் அவர்களிடையே காதல் முதிரக் கூடும் என்று அஞ்சிய சேனதிபதி, விரும்பத்தகாத அவ்வுறவை வெட்டிவிடத் துணிந்து நடவடிக்கை எடுத்தார்.

ஆனல் முஸ்லிம் படைகள் ஸ்பெயினில் சென்று இறங்கிய பிறகு ஜூலியன் விடுத்த கோரிக்கையை ஒரேயடியாக நிராகரித்து விடுவதும் ராஜதந்திரமல்ல என்று அவருக்குப் பட்டது. தன்னை ஸ்பெயினுக்கு அனுப்பிவைக்கும்படி உமர்

கோரியிருந்தது புளோரிந்தாவின் மீது ஏற்பட்ட மையலின் விளைவாக அல்ல என்று மூஸாவுக்கு உறுதியாகத் தெரிந்தது.

அடுத்தடுத்து பல போர்கள் தொடர்ந்து நடைபெறுவது உறுதி என்னும் போது உமரும் புளோரிந்தாவும் ஸ்பெயினில் சந்திப்பதனால் ஈஸா அஞ்சியது போல விபரீதம் எதுவும் விளைவதற்கில்லையாகையால் அவனை அங்கு போகச் செய்வதிலே தீங்கு ஒன்றுமில்லை என்ற முடிவுக்கு இறுதியாக அவர் வந்தார்.

அடுத்து சில தினங்கள் கழித்து சியூட்டாக் கரையை விட்டு ஸ்பெயினை நோக்கிக் கப்பல்களில் புறப்பட்ட படையில் இளவரசன் உமரும் இடம் பெற்றிருந்தான். ஈஸாவைப் போலவே அவனையும் படைப் பகுதி ஒன்றிற்குத் தலைவனாக நியமித்திருந்தார் சேனாதிபதி மூஸா.

கார்த்தேயா பட்டினத்தை முஸ்லிம்கள் கைப்பற்றிய செய்தி தெரிந்ததும் திக் பிரமையடைந்தான், முர்சியா மாகாணத்தின் கவர்னர் ஆன தியோடமிர். ஐயாயிரம் பேர் கொண்ட தன்னுடைய படையை ஓராயிரம் வீரர்கள் மட்டுமே கொண்ட ஒரு சிறிய படை எதிர்த்து அழித்தது என்னும் செய்தியை அவனால் நம்ப முடியவில்லை.

வந்து இறங்கியிருக்கும் முஸ்லிம்களின் படை ஏழாயிரமே என்பதையும் அவர்களுக்கு உதவியாக ஜூலியன் பிரபு வந்திருப்பதையும், தன் ஒற்றர்களின் மூலமாகத் தெரிந்து கொண்டான் தியோடமிர். இத்தகவலையும் கார்த்தேயா பட்டினத்தை இழந்த செய்தியையும்

## புரட்சிகர வாழ்க்கை

துவக்க கால இஸ்லாமிய வரலாற்றில், இஸ்லாமியக் கொடியின்கீழ் அராபிய முஸ்லிம்கள் பெற்ற வியக்கத்தக்க வெற்றிகளைப் போற்றிப் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள், தம்முடைய "டிஸகவரி ஆப் இந்தியா" என்னும் நூலில் "அராபிய முஸ்லிம்கள், தங்களது தீர்க்கதரிசியின் உன்னதமான, புரட்சிகரமான வாழ்க்கையிலிருந்தும், அவரது மனித சகோதரத்துவப் போதனைகளிலிருந்துமே அவ்வளவு மகத்தான சக்தியைப் பெற்றிருக்கவேண்டும். ஒரு புதிய கொள்கையை ஏந்தி நின்றவர்களாக அவர்கள் கொண்டிருந்த ஆர்வமும், தன்னபிக்கையும் சில சமயங்களில் மக்களனைவரையுமே ஈர்த்து, வரலாற்றையும் மாற்றுகிறது" என்று எழுதினார்.

நூல்: இஸ்லாமிய சிந்தனைகள்.
எழுதியவர்: C.M A. அப்துல் காதர் பி. காம். ('யாஸ்மின்')

---

அச்சமயம் வட நாட்டிலிருந்து தலைநகரான தாலதோவுக்குத் திரும்பி வந்து சேர்ந்து விட்ட ராடரிக் மன்னனுக்குத் தெரிவிப்பதற்காக அவன் அவசரத் தூதர்களை அனுப்பிவைத்தான்.

அதோடு நில்லாமல் பத்தாயிரம் பேர்கொண்ட படை ஒன்றை முஸ்லிம்களைத்தாக்கி விரட்டியடிக்கும் நோக்கத்துடன் மறு

படியும் அனுப்பி வைத்தான் தியோடமிர். கார்த்தேயா பிடிபட்ட சில தினங்களுக்குப் பிறகு தாரிக்கின் படை புறப்பட்டு முன்னேறத் தொடங்கியது. விரைவிலேயே தியோடமிர் அனுப்பிய இரண்டாவது படையும் அங்கு வந்து சேர்ந்து பல பிரிவுகளாகப்பிரிந்து, பல ஊர்களையும் கைப்பற்றிக் காத்து நின்ற முஸ்லிம். படைகளை எதிர்க்கத் தொடங்கின. எதிர்த்த இடங்களிலெல்லாம் பலத்த நஷ்டத்துடன் பின் வாங்கி ஓடிக்கொண்டிருந்தனர் ஸ்பானியர்.

அரபியர் இறங்கியிருந்த தெற்கு முனையிலிருந்து ஸ்பெயின் தேசத்தின் கரைகள் ஒன்று வலது பக்கம் வடகிழக்காகவும் மற்றொன்று இடது பக்கம் வடமேற்காகவும் மேற் செல்லுகின்றன. அதன் வடகிழக்குக் கரை மத்தியதரைக் கடல் ஓரமாதலாலும், மற்ற ஐரோப்பிய நாடுகள் அடுத்திருப்பதாலும் ஜன நெருக்கமும் தொழில் வளமும் அங்கு பெருகியிருந்தன.

அட்லாண்டிக் சமுத்திரத்தை ஒட்டிய வட மேற்குக்கரை அவ்விதமல்ல. மக்கள் தொகை

## ‘சாலை’ வீட்டுத் திருமணம்

திரு. சாலை இளந்திரையன் அவர்களின் தங்கையும் மதுரை மீனாட்சி மகளிர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியையுமான செல்வி ஞானபுஷ்பத்துக்கும், தோப்பூர் திரு. உ. பலவேசமுத்து அவர்களின் குமாரர் செல்வன் சௌந்தரபாண்டியனுக்கும், ‘சாலை’யின் ஊரான (நெல்லை மாவட்டம், களக்காடு) சாலைநயினார் பள்ளி வாசலில் 10-7-66 ஞாயிறு காலையில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது. உள்ளூர் வெளியூர் அன்பர்களும் அறிஞர்களும் திரளாக வந்திருந்து மணமக்களை வாழ்த்தித் திருமணத்தைச் சிறப்பித்தார்கள்.

நெ. து. சுந்தரவடிவேலு முதலான கல்வித்துறை அறிஞர்களும், டாக்டர் மு. வ. முதலான தமிழ்த்துறை அறிஞர்களும், கி. ஆ. பெ. விசுவநாதம் முதலான தமிழகத் தலைவர்களும், கோவை அய்யாமுத்து முதலான உழவுத் துறை பெருமக்களும், டி. கே. சண்முகம் முதலான கலைஞர்களும், கி. வா. ஜகந்நாதன் முதலான பத்திரிகைத் துறையாளர்களும், கே. சி. எஸ். அருணாசலம் முதலான பத்திரிகைக் கவிஞர் பெருமக்களும், நாரண துரைக்கண்ணன் முதலான எழுத்தாளர்களும் தில்லி, பம்பாய்த் தமிழ்ச்சங்கங்களும் கல்கத்தாத் தமிழ் மாணவர் மன்றத்தினர், சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர் முதலியோரும் நெல்லை மாவட்டக் கலெக்டர் அவர்களும் தந்திச் செய்திமூலம் மணமக்களுக்குப் பல்லாண்டு கூறி மகிழ்ந்தார்கள்.

வாழ்த்துச் செய்திகளும் அன்பளிப்புப் பரிசுகளும் வழங்கிய பெரியோர் அனைவருக்கும் மணமக்கள் நன்றி தெரிவித்துக் கொள்கிறார்கள்.

குறைவாக இருந்ததோடு அவ் வளவாகப் பாதுகாக்கப் படாம லும் இருந்தது. மேலும் முன் னேறுவதற்கு முன் நன்றாகப் காலூன்றிக் கொள்வதற்கு வாய்ப்பாக அப்பகுதியில் அகன்ற தொரு நிலப்பரப்பைக் கைப்பற்றிக் கொள்ளத் திட்ட மிட்டனர் அரபியர் பல பகுதி கள் எதிர்ப்பின்றியே அவர்கள் வசமாயின.

அட்லாண்டிக் பெருங்கடலுக் கும், ஒரு கடலைப் போலவே பரந்து விரிந்து கிடந்த ஜந்தா ஏரிக்கும் இடைப்பட்ட பிரதேசம் முழுவதும் இப்போது அரபிய ரின் காலடியில் கிடந்தது. மேலும் பல கடற்கரைப் பட்டி னங்களோடு உள் நாட்டிலிருந்த தோனியா என்னும் பெரு நகர மும் கூட எளிதில் அவர்கள் வசப்பட்டது. அதுவரை அவர் கள் பிடித்த இடங்களுள் ஸிதோ னியா தான் மிகப் பெரிய நகரம்.

ஸிதோனியா வெற்றிகொள் ளப்பட்ட தினத்துக்கு அடுத்த நாள்தான் சேனாதிபதி மூஸா அனுப்பிய உதவிப் படை அங்கு வந்து சேர்ந்தது

அந்தப்படையோடு இளவர சன் உமரும் வந்திருக்கின்றான் என்ற செய்தியைத் தன் தந் தையின் மூலம் அறிந்த புளோ ரிந்தா அவனைச் சந்தித்துப் பேசத் துடித்துக் கொண்டிருந் தாள்.

ஆனால் இளவரசன் ஈஸா வுக்கோ தன் தம்பியின் வருகை அளவற்ற மன வேதனையைத் தோற்றுவித்தது. சேனாதிபதி யும் அவனுமாகச் சேர்ந்து செய்த ஏற்பாடு மாறியதன் காரணத்தை அறியாத ஈஸா உமரைத் தனிமையில் சந்தித்துப் பேச விரும்பினான். அவசிய மாயின் புளோரிந்தா பற்றித் தனக்குத் தெரிந்த உண்மையை அவனிடம் எடுத்துக்கூறி, மேற் கொண்டு அவளிடம் பழகுவ தைக் குறைத்துக் கொள்ள வேண்டுமென்று எச்சரிக்கவும் விரும்பினான் அவன்.

# 4. யுத்த முயற்சிகள்

தாரீப் வந்து சென்றதிலிருந்து தனக்குக் கிடைத்த தகவல் களை அச்சமயம் காட்டின் வடபகு தியிலிருந்த ராடரிக் மன்னனுக்கு அவ்வப்போது எழுதி அனுப்பிக் கொண்டிருந்தான் மூர்சியாவின் கவர்னர் தியோடமிர்.

மன்னனுடைய வேண்டுகோ ளுக்கு இணங்க பெரிய பாதிரி யார் நிக்கோலாஸ் கஸ்டைல் மாகாணத்துக்குப் போய்ச் சேர்ந்தபோது அரபியரின் படை யெடுப்பு முயற்சிகள் பற்றி மேலும் பல தகவல்கள் தியோட மிர் இடமிருந்து அரசனுக்குக் கிடைத்திருந்தன. எனவே, உடனே தலைநகருக்குத் திரும்பி அன்னிய எதிரிகளை எதிர்ப்ப தற்கு வேண்டிய நடவடிக்கை களை மேற்கொள்ளுமாறு பாதிரி யார் அவனுக்கு அறிவுறுத்தினார். தாமும் விரைவிலேயே தாலதோ வுக்கு வந்து சேருவதாகச் சொல் லிவிட்டு அவர் உடனே புறப்பட் டுச் சென்றார்.

தாலதோவுக்குத் திரும்பி வந்து சேர்ந்த மன்னன் ராடரிக் கிற்கு, தாரிக் ஸ்பெயினில் படை இறக்கிவிட்ட செய்தி காத்திருந் தது.

அதுவரை அலட்சியாகவே இருந்த மன்னனுக்கு உண்மை யான விழிப்பு அப்பொழுதுதான் ஏற்பட்டது. தன்னுடைய பத

விக்கு ஏற்பட்டிருக்கும் ஆபத்தை அதன் பிறகே முழுமையாக அவன் உணரத் தொடங்கினான்.

அந்த நாட்டிலே சமூக அமைப்பு இருந்த நிலைமையில் பொது மக்களுடைய ஆதரவு என ஒன்றை அவன் எதிர் பார்க்க முடியாது என்பது அவனுக்குத் தெரியும். நூற்றுக்குத் தொண்ணூறு பேர் பிரபுக்களிடம் நில அடிமைகளாக ஊழியம் புரிபவர்கள். அவர்களுக்கு என்று தனி உரிமை எதுவும் இருக்கவில்லை. எஜமானர்களும், அவர்களைக் கசக்கிப் பிழிபவர்களாக இருந்தனர். எனவே, அவர்களிடம் கொண்ட விசுவாசத்தினால், அவர்களுக்காகவேனும், எவ்வித தியாகத்தையும் செய்ய முன் வருவார்கள் என்று எதிர் பார்க்கவும் முடியாது. சவுக்கடி ஒன்றிற்கு மட்டும் அஞ்சியே உழைத்து உழைத்து வந்தவர்கள் அவர்கள்.

நிலப் பிரபுக்களும் கூட அனைவரும் அரசனை ஆதரிப்பவர்களாக

ளாக இல்லை. அவனுக்கு முன் பாக ஸ்பெயினை ஆண்ட விட்டிஸா சக்கரவர்த்தியை சூழ்ச்சியின் மூலம் கொன்று விட்டு சிம்மாசனத்தைக் கைப் பற்றியவன் ராடரிக் என்பதனால் பிரபுக்களுள் பலர் அவனை உள் ளூர வெறுத்து வந்தனர் என் பதும் அவனுக்குத் தெரியாத தல்ல காலஞ்சென்ற விட்டிஸா வின் குமாரர்களும் சகோதரர் களும், நெருங்கிய உறவினர்களு மாக நூற்றுக்கணக்கானவர்கள ஸ்பெயினில் பரவி வசித்துவந் தார்கள். அவர்களுடைய ஆதர வைத் தான் எந்த அளவுக்கு எதிர்பார்க்க முடியும் என்று அவன் யோசித்துப் பார்த்தான்.

தீவிர சிந்தனைக்குப் பிறகு அவன் ஒரு முடிவுக்கு வந்தன். நாட்டையும் அதன் மூலம் தன் பதவியையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானல் அது பிரதம பாதிரியார் நிக்கோலாஸ் ஒருவரின் உதவியால்தான் முடி யும் என்று அவனுக்கு விளங்கி யது.

தம் சுற்றுப் பிரயாணத்தை சுருக்கிக்கொண்டு தலைநகரம் வந்து சேர்ந்த பிரதம பாதிரி யாரை ராடரிக் சென்று கண்டு பணிந்து. "பரிசுத்த தந்தையே, இந்த நாட்டை அன்னியரின் ஆக்கிரமிப்பிலிருந்து காப்பாற்ற உங்கள் ஒருவரால் மட்டுமே முடி யும். கருணைபுரியுங்கள்!" என்று முறையிட்டான்:

"ஆம் ராடரிக்! நானும் அறி வேன் உன்னுடைய கூலிப் படைகளைக் கொண்டுமட்டும் வலிமைவாய்ந்த ஒரு எதிரியை எதிர்த்து வெற்றிகொள்ள உன் னால் முடியாது. ரோம சாம் ராஜ்யத்தை எதிர்த்து நின்று வெற்றிகொண்டு வட ஆப்பி ரிக்கா முழுவதையும் அவர்களிட மிருந்து அபகரித்துக் கொண்ட அரபி இனத்தவர் நம் நாட்டுக் குள்ளும் புகுந்துவிட்டார்கள். நாட்டுக்கு ஆபத்து வந்திருக் கிறது என்னும் சுலோகத்தை மட்டும் சொல்லிக் கொண்டு இங்கு நாட்டு மக்களின் உணர்ச் சிகளைத் தட்டி எழுப்பிவிட முடி யாது என்பதை நாம் இருவரும் உணர்ந்திருக்கிறோம். அவர்க ளுடைய உள்ளங்களிலே உறங் கிக் கிடக்கும் மத உணர்வை எழுப்பிவிட்டு அதற்குப் புத் துயிர் ஊட்டுவதன் மூலமே நாம் வெற்றிபெற முடியும். அந்தப் பணியில் ஈடுபடுவதாக நானும் முடிவு செய்துவிட்டேன் ஆம்! இப்போது வந்திருக்கும் ஆபத்து நாட்டிற்கு மட்டுமல்ல! கிறிஸ்தவ மதத்திற்கே பெரும் ஆபத்து சூழ்ந்திருக்கிறது.

அரபியர் வெற்றிகொண்ட இடங்களில் எல்லாம் அவர்க ளுடைய இஸ்லாம் மார்க்கம் காட்டுத் தீபோல பரவி வந் திருக்கிறது. ஆகையினால்தான் மதத்தைக் காப்பாற்றும் முயற்சி யில் நடைபெறும் ஒரு மதப் போராட்டமாக இதனை நான் கருதுகிறேன். நாடு முழுதும் சுற்றி புனித தேவாலயப் பணி களில் ஈடுபட்டுள்ள பாதிரிமார் கள் அனைவரையும் இப்போது யுத்த முயற்சியில் ஈடுபடச் செய் யப்போகிறேன்.

தாலதோ பெரிய தேவா லயத்தின் கருவூலங்களிலே சேமித்து வைக்கப்பட்டிருக்கும் அளவற்ற செல்வம் அனைத்தை யும் உன்னுடைய யுத்த முயற்சி களுக்குப் பயன்படுத்திக்கொள்ள லாம்.

உன்னுடைய பொறுப்புகளும் மகத்தானவை.

முதலில் உன் பழக்க வழக்கங் களை மாற்றிக்கொள்ளவேண்டும். மிதமிஞ்சிய குடியையும் கேளிக் கைகளையும் தவிர்த்து உன் சுக

போகங்களைக் குறைத்துக் கொள். இரவென்றும் பகலென்றும்பாராமல் ஓயாத உழைப்பை நீ மேற்கொள்ள வேண்டும்.

காலஞ்சென்ற விட்டிலா மன்னனின் உறவினர் ஒவ்வொருவரிடமும் நேரில் சென்று, கடந்த காலத்தின் கசப்பான எண்ணங்களை மறந்துவிட்டு நாட்டின் பாதுகாப்புப் பணியில் உன்னோடு ஒத்துழைக்கும்படி நீ அவர்களைக் கேட்டுக்கொள்ள வேண்டும்! அன்னியரின் படையெடுப்பு அபாயம் நீங்கிய பிறகு அவர்களுக்குரிய நியாயமான உரிமைகளை அவர்களுக்குத் திரும்ப அளிப்பதாக வாக்குறுதி கொடு!

குறைந்தபட்சமாக, தலைநகரிலாவது உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற வேற்றுமை பாராது நேரில் சென்று கண்டோ அல்லது உன் அரசவைக்கு அழைத்தோ அவர்களுடைய ஒத்துழைப்பு தேவை என்று அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும்.

நீ சென்று தட்டவேண்டியது அவர்களின் வீட்டுக் கதவுகளை மட்டும் அல்ல, அடைத்துக் கிடக்கும் அவர்களுடைய உள்ளங்களின் கதவுகளை உன் பேச்சின் மூலம் தட்டித் திறக்கச் செய்யவேண்டும்!''

பெரிய பாதிரியாரின் உணர்ச்சிப் பெருக்கையும் எதிர்பாராத அளவுக்கு அவர் கொடுத்த ஆதரவையும் கண்டு கல்நெஞ்சம் படைத்த ராடரிக்கின் உள்ளமும் கூட நெகிழ்ந்தது.

''பரிசுத்த தந்தையே, தங்களுடைய ஆதரவு இருக்கும் போது நான் எந்த எதிரிக்கும் அஞ்சத் தேவையில்லை. தங்களுடைய கட்டளைகளை நான் சிரமேற்கொண்டு நிறைவேற்றுவேன்.

அவரவர்களுக்குள்ள விகிதாசாரப்படி வீரர்களைத் திரட்டிக் கொண்டு தலைநகருக்கோ, அல்லது போகும் வழியிலோ வந்து சேர்ந்து கொள்ளும்படி நிலப்பிரபுக்களுக்கு உடனே கட்டளை அனுப்பப்போகிறேன்.

## வாழ்த்துகிறோம்


மணமகன்.

முஸ்லிம் முரசு அலுவலக ஊழியர் நாகை ஜனுப் ஜி அஹமது அவர்களுக்கும், எம்.எஸ்.எம். அபூபக்கர் மரைக்காயர் அவர்கள் புதல்வி ஜனுபா சபூரா நாச்சியாருக்கும் 3-7-66ல் நாகூரில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. மணமக்கள் நீடூழி வாழவும், நல் வாழ்வு பெறவும் இறைவன் அருள் புரிவானுக!

'முஸ்லிம் முரசு'
பணிமனைக் குழுவினர்

நாட்டின் சிறைகளிலே அடை பட்டுக் கிடக்கும் அரசியல் கைதிகளையும், வேறு குற்றங்களுக்காக தண்டிக்கப்பட்ட மற்ற கைதிகளையும் கூட விடுதலை செய்து அவர்களையும் நாட்டுப் பாதுகாப்பில் ஈடுபட வைத்து நம் படை பலத்தைப் பெருக்க நினைக்கின்றேன்!" என்று கூறிய மன்னனை இடைமறித்தார் நிக்கோலாஸ்:

"ராடரிக், ஒன்றையொன்று எதிர்த்து நிற்கும் இருதரப்புப் படைகளிலுமுள்ள வீரர்களின் எண்ணிக்கையை மட்டும் கொண்டு அவர்களின் பலத்தை கணிக்கமுடியாது. எண்ணிக்கையில் குறைவாக இருப்பினும் கூட வீரர்களின் தரமும் போர்த் திறனுமே முக்கியமானவை என்பதை மறந்து விடாதே!

உன் சேனை கடல் போலப் பெருத்திருக்கும் என்பதை நான் இப்போதே என் கற்பனைக் கண்களால் காண்கிறேன். ஆனால் திறன் மிகுந்த படைத் தலைவர்களை விரல் விட்டு எண்ணி விடலாம். அப்படிச் சொல்வதும் கூட சரியல்ல. தியோடமிர் ஒருவனைத் தவிர்த்து, வீரத்திலும் விவேகத்திலும் தேசபக்தியிலும் சிறந்தவர்களான வேறு எந்த படைத் தலைவரும் உன்னுடைய சேனையிலே இருப்பதாகத் தெரியவில்லை!"

"பரிசுத்த தந்தையே, தாங்கள் சொல்வது சரிதான் என்றாலும் தியோடமிர் போன்ற தகுதி படைத்த வேறு தலைவர்களை நம்நாடு பெற்றெடுக்க வில்லை என்று நாம் ஒரேயடியாகச் சொல்லி விடவும் முடியாது. சந்தர்ப்பம் வரும்போது பலர் தங்களுடைய திறமையைக் காட்டுவார்கள் என்றே நம்புகிறேன்!"

"பார்க்கலாம்! எனினும் எனக்கு ஒன்று தோன்றுகிறது. கஸ்டைல் புரட்சித் தலைவனான பலாஜியஸ், நான் அறிந்த வீரர்கள் எல்லோரையும் விடத் தகுதியிலும், தேசபக்தியிலும் திறமையிலும், வலிமை மிகு வீரத்திலும் சிறந்தவன் என்று நினைக்கிறேன். அந்நிய நாட்டிலிருந்து வந்திருக்கும் பொது எதிரியை விரட்டியடிப்பதற்கு அவனுடைய ஒத்துழைப்பை நீ கோரினால் அவன் உன் மீது கொண்டுள்ள பகைமையை மறந்து உன் உதவிக்கு வருவான் என்பதில் ஐயமில்லை! உனக்குப் பிடிக்கா விட்டாலும் என் பேச்சை நம்பி அவனிடம் ஒரு தூதனை அனுப்பியவை! அவன் உன்னோடு சேர்ந்து நின்று போரிடும் போது அவனுடைய வீரத்தையும் திறமையையும் பார்த்தாவது மற்றவர்களுக்கும் அவை ஏற்படக்கூடும்!"

பெரிய பாதிரியார் கூறியவற்றுள் இந்த ஒரு விஷயம் மட்டும் மன்னன் ராடரிக்கிற்குப் பிடிக்கவில்லை. எனினும் அவரை மறுத்துப் பேசக் கூடிய நிலைமையில் மன்னன் இல்லையாதலால் அரை மனதாக அவன் அதற்குச் சம்மதித்தான்.

நிக்கோலாஸிடமிருந்து விடை பெற்றுத் திரும்பிய மன்னன் அவர் கூறியபடியே முழு மூச்சுடன் யுத்த முயற்சியில் இறங்கினான்.

பெரிய தேவாலயத்தின் பொக்கிஷ அறைகளுக்குள்ளே அவ்வளவு திரண்ட செல்வம் குவிந்திருக்கும் என்று மன்னனான ராடரிக்கிற்கும் கூட அதுவரை தெரியாது.

நிக்கோலாஸ் அவற்றை வாரி வாரி மன்னனுக்கு அளித்து, போருக்கான ஆயத்தங்களை விரைவிலே செய்து படைதிரட்

டிக்கொண்டு தெற்கே செல்லுமாறு யோசனை கூறிவிட்டுத் தம் சூருவளிப் பயணத்தைத் துவக்கினார்.

யுத்த காலங்களில் ஒவ்வொருவரும், இவ்வளவுபோ கொண்ட படையுடன் வந்து சேர்ந்து கொள்ள வேண்டும் என்பதாக நிலப் பிரபுக்களுக்கும் அரசனுக்கும் இடையே நிலவிவந்த ஒப்பந்தங்களின்படியும், முடிந்தால் அதற்கு மேலும் படைகளைத் திரட்டிக்கொண்டு உடனடியாக வந்து சேரும்படி உத்தரவு அனுப்பினான் மன்னன்.

யுத்த களத்தில் வீரர்களுக்கு உற்சாக மூட்டி ஊக்கமளிப்பதற்காக மேலை நாட்டினரின் வழக்கம்படி பெருமளவில் மங்கையரையுட், நில அறைகளிலே சேமித்து வைக்கப் பட்டிருக்கும் உயர்ந்த மதுவகைகளையும் படைகளுடன் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமெனவும் அவர்களுக்கு மன்னன் உத்தரவிட்டிருந்தான்.

பாதிரியார் கூறியபடி விட்டிஸாவின் உறவினர் அனைவரையும் அழைத்து அவர்கள் ஒத்துழைப்பைக் கோரவும் அவன் தயங்கவில்லை.

ஆனால் வடக்கத்தியப் புரட்சி வீரனை பலாஜியஸ் இடம் தூது அனுப்புவதற்கு மட்டும் கடைசிவரை அவனுக்கு மனம் ஒப்பவில்லை பாதிரியார் புறப்பட்டுச் சென்று விட்டதால் அது பற்றி அவனிடம் நினைவு படுத்தக்கூடியவர்கள் கூட யாரும் அங்கில்லை.

இந்த நிலைமையில் படை புறப்படுவதற்காகக் குறிப்பிடப் பட்டிருந்த தினத்துக்கு முந்திய நாளன்று அவசரத் தூதன் ஒருவன் மன்னனிடம் வந்து நிருபம் ஒன்றை நீட்டினான்.

அதைப் பெற்றுப் படித்த மன்னன் அளவில்லாத் திகைப்புக்கும் குழப்பத்துக்கும் ஆளானான்.

(தொடரும்)

★ காயிதெ மில்லத் உடைய இளமையின் ரகசியம் என்ன ?

★ சுகர்ணு ஏன் கண்ணீர் விட்டார் ?

★ உணவுப் பற்ருக் குறையை இந்தியா சமாளிக்குமா ?

★ இந்தியா—பாக் விஷயத்தில் ரஷ்யாவின் நிலை என்ன ?




எம். முகம்மது யூசுப்,
திருநெல்வேலி.

கே: சோவியத் யூனியனுடைய மக்கள்தொகை என்ன? அந்த நாட்டில் எத்தனை தேசிய இனங்கள் உண்டு?

ப: மக்கள் தொகை 22 கோடி 63 லட்சத்துக்கு அதிகமாகும். நூற்றுக்கு மேற்பட்ட தேசிய இனங்கள் இந்நாட்டில் வாழ்கின்றனர்.

எல். ஏ. குலாம், பினங்கு.

கே: சோவியத் நாடு தொழில்கள் மிகுந்த நாடா? விவசாய நாடா?

ப: சோவியத் நாடு மிகப் பெரிய தொழில் அரசு. இங்கு 2,00,000 தொழில் நிலையங்கள் இருக்கின்றன. தொழில் துறை உற்பத்தியில் சோவியத் யூனியன் உலகில் இரண்டாவது இடம்பெற்றுள்ளது. விவசாயத்திலும் பெரிய நாடுதான். 39,39700 கூட்டுப் பண்ணைகள் இருக்கின்றன. இவற்றில் 1,63,00,000 விவசாய குடும்பங்கள் வேலைசெய்கின்றன. இவற்றையன்றி அரசாங்கப்பண்ணைகள் என்று அழைக்கப்படும் 8,570 அரசாங்க விவசாயப் பண்ணைகளும் இருக்கின்றன. 26,00,000 டிராக்டர்களும் உண்டு.

எஸ். ஏ. வஹாப், நாகை.

கே: எகிப்தின் தலைவர் நாஸிர் முஸ்லிம் நாடுகளாலும், ஐரோப்பிய வல்லரசுகளாலும் எதிர்க்கப்படுகிருர் அல்லவா? அவை எந்த நாடுகள்?

ப: நாஸிரை எதிர்க்கின்ற முஸ்லிம் நாடுகள் சவூதிஅரேபியா, ஜோர்டான், ஈரான், துருக்கி! வல்லரசுகளான கிரேட் பிரிட்டனும் அமெரிக்காவும் எதிர்க்கின்றன. இஸ்ராயீல்தான் நாஸிரின் பரம வைரி.

கே. எஸ். அஹ்மது,
திண்டிவனம்.

கே: முஸ்லிம்கள் தொழில் நுணுக்கத் துறையில் ஈடுபட வேண்டுமென்று தலையங்கம் எழுதியிருக்கிறீர்கள். இந்த வேலையை வக்பு போர்டு செய்ய லாமே!

ப: நிறைய சொத்துஇருக்கிறது. வக்பு போர்டு செய்யலாம் உறுப்பினர்கள் முயற்சி செய்யவேண்டும். இளைஞர்கள் கிளர்ச்சி செய்யவேண்டும். புதிய கல்லூரி யொன்று பெண்களுக்காக தஞ்சையில் நிறுவப்போகிறதாம் வக்பு போர்டு.நல்ல யோசனை தான். ஆனால் எதை முன்னால் செய்வது எதைப் பின்னால் செய்வது, என்று யோசிக்கவேண்டும். குதிரைக்கு முன்னால் வண்டியைப் பூட்டுவது போன்ற வேலைதான் முதலில் பெண் கல்லூரி. முதலில் ஆண்களுக்கு வாய்ப்பு ஏற்படுத்திய பின்பு பெண்களுக்காக கல்லூரி ஏற்படுத்துவதே புத்திசாலித்தனம்.

மு. முஹம்மது ஹபீப், மாயூரம்.

கே: பழைய முஸ்லிம் தலைவர்களின் பெயர்களை குழந்தைகளுக்கு வைப்பது தமிழக முஸ்லிம்களின் பழக்கம். ஜின்னாஹ், லியாக்கத் அலீ போன்றவர்களின் பெயர்களை வைத்தனர். இப்பொழுது ஏன், அய்யூப் கான், ஜுல்பிகர் அலீ பூட்டோ ஆகியவர்களின்பெயர்களை நாம் வைப்பதில்லை?

ப: பல காரணங்கள் உண்டு. புதுமையிலேயே மக்களுக்கு மோகம். ஜின்னாவும், லியாக்கத் அலீயும் இந்தியத் தலைவர்களாக இருந்தபோது அப்பெயர்களை வைத்தனர். அவையும் புதிய பெயர்கள். அய்யூப், ஜுல்பிகர் போன்ற

## நன்றி

எனது புதல்வன் எம். எம். ஹம்துல் பாஷாவுக்கும், திருச்சி வி. எஸ். எஸ். வருசை முகம்மது ராவுத்தர் புதல்வி வி. சையது ஆமினா பீவிக்கும் நடந்தேறிய திருமணத்தின் போது வந்திருந்து வாழ்த்துத் தெரிவித்த நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் வெளிநாட்டி லிருந்து ஆசிச்செய்தியனுப்பிய அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என். முகம்மது யூசுப் ராவுத்தர்,
கமிஷன் மண்டி,
மயிலம், திருச்சி.
போன்: 2442.

பெயர்கள் ஏற்கனவே தமிழ் நாட்டில் உண்டு. இவை பழைய பெயர்களே. ஜானி வாக்கர் போன்ற வடஇந்திய சினிமா நட்சத்திர பெயர்களை வைக்கின்றனர். ஜுல்பிகர் அலீ பூட்டோவின் பெயரையும் வைப்பார்கள். ஆனால் பூட்டோ (புட்டோ என்பதே சரியான உச்சரிப்பு) நம் நாட்டில் நல்லபெயர் வாங்கவில்லை. ஜானிவாக்கர்போன்ற சினிமா நட்சத்திரப் பெயர்களை வைப்பவர்களுக்கு மண்டையில் மூளையில்லை.

எஸ். அகமது நெய்னு,
ஆதிரங்கம்.

கே: வயது 71 ஆகியும் காயிதெ மில்லத் இஸ்மாயில் சாஹிப், இளைஞரைப் போல் திடகாத்திரராக இருப்பதற்கு என்ன காரணம்?

ப: காயிதே மில்லத் குறைந்த, எளிய உணவே சாப்பிடுவது வழக்கம். உப்புமாதான் நண்பகல் உணவு! வெளியூர்களில் விருந்து நடந்தால், காயிதெ மில்லத் பெயரால் மற்றவர்கள் உண்டு மகிழ்வார்கள். தலைவர் சாப்பிடுவது சிறிதளவே. சத்தான உணவு சாப்பிடுவதும் வழக்கமில்லை. நடை உடைகளில் எப்படி எளிமையும் தாழ்மையும் இருக்கின்றனவோ, அப்படியே உணவிலும் எளிமை. எப்படித்தான் உடம்பு கட்டுக் குலையாமல் இருக்கிறதோ! ஒரு இளைஞனைப் போலவே, சுறுசுறுப்பாகவும், சதா பேசிக் கொண்டும் இருக்கிறார்கள். நீங்களும் இவ்விதம் இருந்து பாருங்கள். இளமையிலிருந்தே இப் பழக்கம் இருந்து வந்தால் நல்லது. இடையில் மாற்றினாலும் பாதகமில்லை. நீண்டகாலம் வாழலாம்.

கே. கே. அலீ, கோட்டார்.

கே: உணவுப் பற்றாக்குறையை இந்தியா வருங்காலத்தில் சமாளிக்க முடியுமா?

ப: குழந்தைகளை மிகக் குறைவாகப் பெற்றால்தான் சமாளிக்க முடியும். உணவு எவ்வளவு அதிகமாக உற்பத்தியானாலும், ஜனப்பெருக்கம் வேகமாக உயர்ந்து கொண்டே போனால் பயனில்லை. இன்றைய ஜனப்பெருக்க வேகத்தின்படி, இன்

## திருமணம்

நாச்சியார் கோவில் பள்ளிவாசல் பேஷ் இமாம் கே. எம். முகம்மது இபுறாஹீம் ஆலிம் சாஹிபுவின் புதல்வர் அப்துல் அஜீஸ் அவர்களுக்கும், கோயமுத்தூர் கோட்டை டி. எம். அப்துல் ஸலாம் ராவுத்தர் புதல்வி மிஹ்றுன்னிஸாவுக்கும் 4—7—66ல் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. மணமக்கள் வாழ்க!

னும் 10 வருடங்களில் இந்தியாவில் 20 கோடி மக்கள் அதிகமாகிவிடுவர். அதாவது 1976-ல் இந்திய ஜனத்தொகை 65 கோடி! அப்பொழுது இந்தியாவின் உற்பத்தியும் பற்றாது. வெளிநாடுகளும் நமக்கு உதவி செய்ய முடியாது. வெளிநாடுகள் தங்கள் தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்ளவே தவிக்கும் நிலை ஏற்படும். அமெரிக்காவில் குடும்பக் கட்டுப்பாட்டிற்காக பெண்களுக்கு "லூப்" என்ற கருவியைக் கண்டு பிடித்த டாக்டர் லிப்ஸ் இவ்விதம் கூறுகிறார். ஒவ்வொரு தாயும் இரண்டு குழந்தைகளுக்கு மேல் பெறக் கூடாது என்று சபதம் எடுத்துக் கொள்ள வேண்டுமாம்.

எஸ். நஜீமா பேகம், காரை.

இந்தோனேசிய அதிபர் சுகர்ணா அதிகாரப் பதவியில் இருப்பதை அவருடைய நாட்டு மக்கள் விரும்ப வில்லை என்பது நிச்சயமாக அவருக்குத் தெரிந்திருந்தும், பதவியைத் துறக்க அவர் ஏன் விரும்பவில்லை?

ப: பதவிமோகம் யாருக்குத்தான் இல்லை! சுகர்ணாவை முன்பே நிரந்தரத் தலைவர் என்று சட்டம் செய்துவிட்டனர். அதனை மாற்ற முடியவில்லை, அத்தீர்மானத்தைக் காட்டி அதிகாரத்தைக் கைவிட அவர் மறுக்கிறார்.

ஏ. அப்துல் லதீப், நவ்ரங்கபூர்.

கே: சுகர்ணு தமது நாட்டுக்குச் செய்த தியாகங்களைப் பற்றிப் பேசும்போது, ஏன் அழுதார்?

ப: சர்வாதிகாரிகள் தங்களின் செல்வாக்கு சரிவதைப் பார்க்கும் போது வேதனையால் அழுவது இயல்பு. அதிகாரத்தை விட்டுப் போக மனம் வராது. ஒவ்வொரு ஊரிலும், தொழிலிலும் இது போன்ற சர்வாதிகாரிகள் உண்டு. சமயம் வரும்போது, சர்வாதிகாரிகள் மற்றவர்களுக்கு இணங்கிப் போகாவிட்டால் அவர்களுக்கு அபாயமே வரும். படித்த முட்டாள்களில் ஒருவர் இந்தோனேசியப் பிரதமர் சுகர்ணு. சர்வாதிகாரிகள் அனைவருமே மாணவர்களுக்கு மண்டியிடவேண்டிய காலம் வரும்.

எம். அபூபக்கர், கோட்டயம்.

ப: பாக்கிஸ்தானுக்கு இராணுவ உதவிகள் செய்வதில் யு. எஸ். அரசாங்கம் ஆவலாயிருக்க என்ன காரணம்?

ப: பாக்கிஸ்தான் கம்யூனிஸ்ட் நாடுகளின் பக்கம் ஒரேயடியாகச் சாயந்துவிடாமல் இருக்கவேண்டுமே என்ற கவலைதான். வடக்குவியட்நாமுக்குப் பின்பு, பாகிஸ்தானும் சீனவுடன் சேர்ந்துவிட்டால் என்ன செய்வது?

ஆர். கண்ணப்பன்,
புதுக்கோட்டை.

கே: இந்தியா—பாக். விஷயத்தில் ரஷ்யாவின் நிலை என்ன?

ப: இந்தியா-பாக்கிஸ்தான் இரண்டு நாடுகளும், வருங்காலத்தில் வியட்நாம் போல் ஆகிவிடக் கூடாது என்ற கவலை.

எஸ். மஹ்மூது, சென்னை-3.

கே: சென்னை அறநிலையப் பாதுகாப்பு அமைச்சகத்தின் தலைமையில் பல நல்ல வேலைகள் நடக்கின்றன. பெரிய கோயில்களின் வருமானத்தைக் கொண்டு சிறிய கோயில்களை நடத்துகிறார்கள். பெண்களுக்காகக் கல்லூரி அமைக்கிறார்கள். இன்னும் பல நல்ல காரியங்களை நடத்துகிறார்கள். நமது வக்பு போர்டு ஏன் இது போன்ற காரியங்கள் செய்யக் கூடாது?

ப: செய்யலாம். போர்டு உறுப்பினர்களின் போக்கு அப்படியிருக்கிறது. கட்சி மனப்பான்மையில் கடமையை மறந்தவர்களும் இருக்கின்றனர். சமுதாயத்திலுள்ள இளைஞர்கள் கிளர்ச்சி செய்ய வேண்டும். இந்தோனேசிய இளைஞர்களே நமக்கு வழிகாட்டிகள்.

Edited & Published by N. B. Rameeza 18, Ramasamy St, Madras-1. Printed by V. Sambandan at Senguntha mithran Press. 23 Armenian St., Madras-1

## 22 காரட்

# UMAR தங்க கவரிங் நகைகள்




| | | |
|---|---|---|
| No. 11 | Rs. | 25—50 |
| No. 12 | Rs. | 16—00 |
| No. 13 | Rs. | 10—00 |
| No. 14 | Rs | 18—00 |
| No. 15 | Rs. | 9—50 |
| No. 16 | Rs. | 9—50 |
| No. 17 | Rs. | 8—50 |
| No. 18 | Rs. | 3—50 |
| No. 19 | Rs. | 8—50 |
| No. 20 | Rs. | 25—50 |
| No. 21 | Rs. | 3—00 |
| No. 22 | Rs. | 4—50 |
| No 23 | Rs. | 4—00 |
| No. 24 | Rs. | 4—50 |

கேட்லாக்
வேண்டுவோர்
20 பைசா ஸ்டாம்பு
அனுப்பலாம்.

## உம்மா கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

552, பைகிராப்ட்ஸ் ரோடு,
திருவல்லிக்கேணி :: சென்னை-5.